


# பாண்டியன் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட்

(இந்தியாவில் ஸ்தாபிதம் 1933)

தலைமை ஆபீஸ் : மதுரை

## சிறந்த சேவை செய்து வருகிறது.



## நெருப்பு, மோட்டார், விபத்து

முதலிய

**சகலவித இன்ஷ்யூரன்ஸ் திட்டங்கள்.**

**மொத்த ஆஸ்திகள் ரூ. 59,80,000**



கிளைகள் :

பம்பாய், அகமதாபாத்,
கல்கத்தா, ராவல்பிண்டி.



பிரதம ஏஜெண்டுகள் :

## எ. & எப். ஹார்வி லிமிடெட்

**மதுரை etc.**


VINOLIA
WHITE ROSE SOAP

# கல்கி
## பொருளடக்கம்

ர் 5
ழ் 41

1946 மே 19

விய
வைகாசி 6




'ல்கி'யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனையே.



# கல்கி

மலர் 5 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 41

# என்ன சேதி?

## இந்தியாவின் சுதந்திர சாஸனம்

## மூன்று மந்திரிகளின் முடிவான திட்டம்

**பிரிட்டிஷ் பிடிவாதத்துக்கும் காங்கிரஸ் தலைவர்களின் பொறுமைக்கும் மகத்தான வெற்றி; ஜின்னா முட்டுக் கட்டைக்கு மாபெருந் தோல்வி!**

### ந்திரிகள் விஜயம்

பிரிட்டிஷ் பிடிவாதம் என்றால் பிரிட் ஷ் பிடிவாதந்தான்! அதற்கு இணை க்த ஏழு பதினாலு உலகத்திலும் டையவே கிடையாது.

இரண்டு மாதத்துக்கு முன்னால் பிரிட் ஷ் மந்திரிகள் மூன்று பேர் பிரதம ந்திரி அட்லியின் பரிபூரண ஆசீர்வாதத் டன் இந்தியாவுக்கு வந்தார்கள். ந்தியாவின் சுதந்திரத்தை இந்தியர்க டம் கொடுத்து விட்டுத்தான் திரும்பு து என்ற பிடிவாதத்துடனே அவர்கள் திருப்பதாகச் சொன்னார்கள்.

"இந்தியாவின் சுதந்திரத்தை இதோ காண்டு வந்திருக்கிறோம். அதை முழு க வேணுமானாலும் பெற்றுக் கொள் ங்கள். இரண்டாகவோ மூன்றாகவோ ாந்து வேணுமானாலும் பெற்றுக் ாள்ளுங்கள். ஆனால் உங்களுக்குள் ஒரு டிவு செய்து கொண்டு ஒற்றுமையுடன் ங்கிக் கொள்ளுங்கள்!" என்றார்கள்.

ஆனால் காரியம் அவ்வளவு சுலபமாக க்கு மென்று தோன்றாமல் போகவே, னித்தனியாகவும் கூட்டம் கூட்டமாக இந்தியத் தலைவர்களைப் பார்க்கத் தாடங்கினார்கள். காங்கிரஸ் தலைவர் ளப் பார்த்தார்கள்; லீக் தலைவர்களைப் ர்த்தார்கள்; சீக்கியத் தலைவர்களையும் கிறிஸ்துவத் தலைவர்களையும் பார்த் தார்கள்; சமஸ்தானாதிபதிகளையும் அவர் களுடைய திவான்களையும் பார்த்தார்கள்; ஆழக் குழி தோண்டிப் புதைக்கப்பட்ட ஜஸ்டிஸ் கட்சியின் தலைவரைக்கூடப் பார்த்து வைத்தார்கள்.

அன்றாடம் வந்த பத்திரிகைச் செய்தி களிலிருந்து பின் வரும் புள்ளி விவரங்களை அறிந்து கொண்டோம்:—

மகாத்மா காந்தியுடன் ஸர் ஸ்டாபோர்டு கிரிப்ஸ் மொத்தம் 327 மணி 54 நிமிஷம் 25½ விநாடி நேரம் பேசினார்!

ஜனாப் ஜின்னாவுடன் லார்டு பெதிக் லாரன்ஸ் மொத்தம் 456 வருஷம் 7 மாதம் 44½ விநாடி நேரம் பேசினார்!

பண்டித ஜவாஹர்லால் நேருவுடன் மிஸ்டர் அலெக்ஸாண்டர் நாலு யுகம் இருபத்தேழாயிரம் வருஷம் ஒன்பதே முக்காலே அரைக்கால் மாதம் பேசினார்!

### ஸிம்லா நாடகம்

டில்லியில் இப்படி யெல்லாம் பேசிய பிறகு ஸிம்லாவுக்குச் சென்று அங்கே மறுபடியும் தனித்தனியாகத் தலைவர்களை அழைத்துப் பேசினார்கள். பிறகு, காங் கிரஸ் தலைவர்களையும் லீக் தலைவர்களை யும் சேர்த்து வைத்துத் தாங்களும் உடனிருந்து பேசினார்கள்.

கடைசி தினத்துக்கு முதல் தினம் ஜனாப் ஜின்னாவும் பண்டித ஜவாஹர்லால்

நேருவும் 70 நிமிஷம் பேசினார்கள் என்று செய்தி வந்தபோது, உலகமே தன்னுடைய சுழலும் கடமையை மறந்து ஸ்தம்பித்து நின்றது! காங்கிரஸ் லீக் ஒற்றுமை ஏற்பட்டு விட்டதாக்கும் என்று எண்ணி இமயமலை முதல் கன்னியாகுமரி வரையில் உள்ள மக்கள் முள்ளின் மேல் நின்றார்கள்.

ஆனால் அவர்கள் அடைந்தது மறுபடியும் பெரிய ஏமாற்றந்தான். மகாத்மாவினால் சாதிக்க முடியாத காரியத்தை ஜவாஹர்ஜியினாலும் சாதிக்க முடியவில்லை. ஜின்னா இன்று மறுபடியும் 'பெப்பே' என்று சொல்லி விட்டார்.

ஒற்றுமை ஏற்படாதபடியால் வழக்கம் போல் அதைச் சாக்காக உபயோகித்து பிரிட்டிஷ் மந்திரிகள் கையை விரித்து விட்டுக் கிளம்பி விடுவார்கள் என்று எதிர்பார்க்கப்பட்டது. ஆனால் இந்தத் தடவை அவர்கள் அப்படிச் செய்யவில்லை. "இன்னமும் சுதந்திரம் கொடுத்துத்தான் தீர்வோம்!" என்று பிடிவாதம் பிடித்து, இந்தியாவுக்காக அவர்களே ஒரு சுதந்திரத் திட்டத்தைத் தயாரித்து வெளியிட்டிருக்கிறார்கள். ஆட்லியின் ஆசீர்வாதத்துடனேதான் மேற்படி திட்டமும் வெளியாகி யிருக்கிறது.

## முக்கிய அம்சங்கள்

மூன்று மந்திரிகள் வெளியிட்டுள்ள இந்திய சுதந்திரத் திட்டத்தின் முக்கிய அம்சங்கள் பின்வருமாறு:—

1. இந்தியாவின் நிரந்தரமான சுதந்திர அரசியல் இன்னின்ன அடிப்படையில் அமைய வேண்டுமென்று பொதுப்படையாகச் சிபாரிசு செய்திருக்கிறார்கள்.

அதன்படி, இந்தியா தேசம் முழுவதிற்கும் (சுதேச சமஸ்தானங்கள் உள்பட) ஒரு ஐக்கிய சர்க்கார் ஏற்படும். தேசப் பாதுகாப்பு (அதாவது இராணுவம்), அயல்நாட்டு விஷயங்கள், போக்குவரவு வசதிகள் ஆகிய மூன்று காரியங்களை மட்டும் மேற்படி ஐக்கிய சர்க்கார் பொறுப்பு வகித்து நடத்தும். மற்ற எல்லாக் காரியங்களையும் அந்தந்த மாகாண சர்க்கார்களும் சமஸ்தான அரசாங்கங்களும் பொறுப்பு வகித்து நடத்திக் கொள்ளும்.

மேற்படி அகில இந்திய ஐக்கிய சர்க்காருக்கு உட்பட்டு மாகாணங்கள் தங்களுக்குள் தனிக் கூட்டுறவை ஏற்படுத்திக் கொண்டு உப ஐக்கிய சர்க்கார்களை அமைத்துக் கொள்ளலாம். அதாவது பஞ்சாப், எல்லைப்புறம், சிந்து முதலிய முஸ்லிம் மாகாணங்கள் இஷ்டப்பட்டால் ஐக்கியமாகச் சேர்ந்து இந்திய சர்க்காருக்கும் மாகாண சர்க்காருக்கும் நடுவில் ஒ திரிசங்கு சர்க்காரை ஏற்படுத்தி கொள்ளலாம்.

2. மேற்கண்ட அடிப்படையின்பேரில் நி தரமான சுதந்திர அரசியலை விவரமாக நிர் யிப்பதற்காக அரசியல் நிர்ணய சபை ஒ உடனே அமைக்கப்படும்.

மேற்படி அரசியல் நிர்ணய சபையி மாகாணங்களுக்கு 292 ஸ்தானங்களு சுதேச சமஸ்தானங்களுக்கு 93 ஸ்தான களும் இருக்கும்.

மாகாணங்களுக்குரிய ஸ்தானங்களுக் மாகாண சட்டசபைகள் பிரதிநிதிகளை தேர்ந்தெடுக்க வேண்டும்.

ஒவ்வொரு மாகாணத்துக்கும் பொ ஸ்தானங்கள் எவ்வளவு, முஸ்லிம் ஸ் னங்கள் எவ்வளவு என்றும் குறிப்பி டிருக்கிறார்கள்.

சென்னை மாகாணத்துக்குப் பொ ஸ்தானங்கள் 45-ம் முஸ்லிம் ஸ்தானங் 4-ம் ஆக 49 ஸ்தானங்கள்; இம்மாதிரி மற்ற மாகாணங்களுக்கும். பஞ்சாபி மட்டும் சீக்கியருக்கு நாலு தனி ஸ் னங்கள் உண்டு.

ஆக எல்லா மாகாணங்களுக்கும் சே துப் பார்க்கும்போது பொது ஸ் னங்கள் 210, முஸ்லிம் ஸ்தானங்கள் சீக்கியர் ஸ்தானங்கள் 4 என்று நிர்ண கப்பட்டிருக்கிறது. ஜனத்தொகை வி சாரப்படி இதை நிர்ணயித்திருக்கிறார்க

3. மேற்கண்டவாறு அரசியல் நிர்ணயச கூடி நிரந்தரத் திட்டத்தைத் தயாரிக்கும் வ க்கும் இடைக்கால இந்திய தேசிய சர்க் ஏற்பட்டு இந்தியாவின் ஆட்சியை நடத்தும்.

மேற்படி இடைக்கால தேசிய சர்க் பொதுஜன நம்பிக்கையைப் பெ தேசத் தலைவர்களைக் கொண்டு அமைக் படும். இராணுவ இலாகா உள் எல்லா இலாகாக்களையும் தே சர்க்காரே நிர்வாகம் செய்வார்கள்.

இத்தகைய இடைக்கால தேசிய ச கார் நடக்கும்போது சமஸ்தானங்கள் சார்பாக ஒத்துழைக்க ஆலோசனை ச ஒன்று ஏற்படும்.

4. மேற்படி அரசியல் நிர்ணய சபை பிரிட்டிஷ் சர்க்காரோடு பேச்சு வார்த் நடத்தி பிரிட்டனுக்கும் இந்தியாவுக்கும் உ படிக்கை செய்து கொள்வார்கள்.

5. புதிய அரசியலின் கீழ் இந் இஷ்டப்பட்டால் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத் சேர்ந்திருக்கலாமென்றும், இல்லாவி பிரிந்துபோய்த் தனிப்பட்ட ஸ்வசுமான சு திரத்தை அனுபவிக்கலாமென்றும் கடைசி வற்புறுத்திச் சொல்லியிருக்கிறார்கள்.

## பலிக்க வில்லை!

-உம்மன்

ஜனாப் ஜின்னாவின் மூட்டுக் கட்டையைப் புறக்கணித்து விட்டு பிரிட்டிஷ் மந்திரிகள் இந்தியாவுக்குச் சுதந்திரம் அளிக்கத் தீர்மானித்து விட்டார்கள்.

## திருப்திகரந்தான்

மொத்தத்தில் மேற்படி திட்டம் மிகவும் திருப்திகரமானது என்றே சொல்ல வேண்டும்.

இந்தத் திட்டத்தின் மூலம் பிரிட்டிஷ் தொழிற் கட்சியார் தங்களுடைய நல்ல எண்ணத்தை நிரூபித்திருக்கிறார்கள்; தங்களுடைய வாக்குறுதியை மெய்ப்படுத்தியிருக்கிறார்கள்.

ஜனாப் ஜின்னாவின் முட்டுக் கட்டையைப் பயன்படுத்திக் கொண்டு அவர்கள் மறுபடியும் இந்தியப் பிரச்னையைத் தள்ளிப் போட முயற்சி செய்யவில்லை யென்பது பெரிய காரியம்.

எகிப்திலிருந்து பிரிட்டிஷ் சைனியம் வாபஸ் ஆவதும், இந்தியாவைப் பற்றி இந்தத் திட்டம் வெளியாகியிருப்பதும் பிரிட்டிஷ் ஜாதியைப் பற்றி உலக அபிப்பிராயத்தையே உயர்த்துவதாகும்.

## வாழ்த்துகிறோம்

மேற்படி மூன்று மந்திரிகளின் திட்டம், நமது மாபெரும் காங்கிரஸ் தலைவர்கள் இந்தத் தடவை காட்டிய அளவற்ற பொறுமைக்கும் தலை சிறந்த இராஜ தந்திரத்துக்கும் மகத்தான வெற்றி என்றே சொல்ல வேண்டும்.

மகாத்மாவையும், மௌலானாவையும், பண்டித ஜவாஹர்லாலையும், சர்தார் வல்லபாய் படேலையும் மனமார வாழ்த்துகிறோம். தீர்க்கமுடியாதென்று தோன்றிய அரசியல் சிக்கலிலிருந்து இந்தியாவை அவர்கள் விடுதலை செய்து வெற்றி மாலை சூடியிருக்கிறார்கள்.

சென்ற 25 வருஷத்தில் தேச மக்களும் தேசத் தொண்டர்களும் செய்த மகத்தான தியாகங்களெல்லாம் பயன்படும்படியான மார்க்கத்தைக் கடைப்பிடித்து வெற்றி பெற்றிருக்கிறார்கள்.

அத்தகைய மாபெருந் தலைவர்களை மீண்டும் மீண்டும் வாழ்த்துகிறோம்.

## ஒரு நிபந்தனை

இவ்வளவு தூரம் நாம் மகிழ்ச்சி கொண்டாடிய போதிலும், வாழ்த்துக் கூறி வெற்றிமாலை சூட்டிய போதிலும், இவ்வளவையும் ஒரு நிபந்தனையோடேயே செய்யவேண்டியிருக்கிறது.

நமது மகிழ்ச்சியும் வாழ்த்துக்களும் ஊர்ஜிதமாவது ஒரு முக்கியமான காரியத்தைப் பொறுத்திருக்கிறது.

அதாவது இடைக்கால தேசிய சர்க்கார் எப்படி அமையப் போகிறது என்பது தான் அந்த முக்கியமான காரியம்.

அரசியல் தீர்ப்புக் கூறும் விஷயத்தி பிரிட்டிஷ் மந்திரிகள் காட்டிய உறுதியை யும் துணிச்சலையும் விசால புத்தியையு தேசிய சர்க்கார் அமைக்கும் விஷயத்தி வைஸராய் வேவல் காட்ட வேண்டு

இடைக்கால தேசிய சர்க்கார் எப்ப அமைகிறது என்பதைப் பொறுத்து தான் அரசியல் நிர்ணய சபை சரியா முறையில் ஏற்பட்டு மூன்று மந்திரிகளி திட்டம் காரியத்தில் நிறைவேறும்.

## ஜின்னா என்ன செய்வார்?

சுதந்திரமும் சந்தோஷமும் தனி தனி விஷயங்களாகும். ஒரு தேசம் சுத திரமாயிருக்கலாம்; ஆயினும் சந்தோ மின்றித் துன்பத்தில் உழன்று கொ டிருக்கலாம்.

இந்தியா சுதந்திரம் அடைவதோ கூடச் சந்தோஷமாயும் இருக்க போகிறதா என்பது ஜனாப் ஜின்னாவை ஓரளவு பொறுத்திருக்கிறது.

மூன்று மந்திரிகளின் திட்டம் ஜனா ஜின்னாவுக்கு ஒரு மாபெருந் தோல் என்பதில் சந்தேகமில்லை. அவருடை பாகிஸ்தான் ஆகாசக் கோட்டை தகர்ந் சிதறிப் போய் விட்டது.

மகாத்மா முதலிய காங்கிரஸ் தல வர்கள் எவ்வளவோ தடவை எவ்வளவே விதமாக ஜனாப் ஜின்னாவை அணுகி சமரசம் பேச முயன்றும் அதற்கெல்லா கொஞ்சமும் இணங்காமல் மேலே மேலே உச்சாணிக் கிளைக்குப் போய்க்கொ டிருந்ததின் பலனை ஜனாப் ஜின்னா இ போது அனுபவிக்கிறார்.

எப்படியாவது சமரசம் ஏற்படுத் விடுவது என்று கங்கணங் கட்டி கொண்டு வந்த பிரிட்டிஷ் மந்திரிக ஜனாப் ஜின்னாவின் கோரிக்கைக எவ்வளவு அசாத்தியமானவை என் கண்டு தீர்ப்பும் சொல்லி விட்டார்கள்.

பாகிஸ்தான் கொடுக்கா விட்டா உள்நாட்டு யுத்தம் தொடங்கி இரத்த களரி செய்வோம் என்று ஜனாப் ஜின் வும் அவருடைய துணைவர்களும் பேசி கொண்டிருந்தார்கள். அதையெல்லா தேய்ந்து மறைந்த கனவைப்போ மறந்துவிட்டு இப்போதேனும் அவர்க காங்கிரஸ் தலைவர்களுடன் ஒத்துழைக் முன் வரவேண்டும்.

அப்படியின்றி, உண்மையாகவே நா டில் கலகத்தையும் துவேஷத்தையு மூட்ட முஸ்லிம் லீக் தலைவர்கள் முற்ப டால், தேச மக்களின் மற்றப் பகுதியின அந்த நிலைமையைச் சமாளிக்கத் தயார யிருக்க வேண்டும். சமாளிக்க முடியு என்பதில் சந்தேகமில்லை.

---

சென்ற இதழில் வெளியான காலக்ஷேபத் துணுக்குக்குப் பரிசு பெற்றவர் எம். எஸ். துரைசாமி, 244, கிழக்கு அடையவளஞ்சான் தெரு, ஸ்ரீரங்கம்.

# பேச்சினால் பஞ்சம் தீருமா?

நமது சென்னை மாகாணத்தின் புதிய மதி மந்திரிகள் இந்த வெய்யில் காலத்தில் அங்கு மிங்கும் அலைந்து திரிந்து "பொது ஜனங்களே! எங்களோடு ஒத்துழையுங்கள்; கொஞ்சம் உதவி செய்யுங்கள்!" என்று கெஞ்சுவதைப் பத்திரிகைகளில் படிக்கும்போது பரிதாபமாயிருக்கிறது. நேரில் அவர்களுடைய பரிதாப வேண்டுகோளைக் கேட்கும் ஜனங்களுக்குக் கண்ணில் ஜலம் வரும் என்பதில் சந்தேகமில்லை.

"நாங்கள் பொதுஜன மந்திரிகள்; இதை மறந்து விட வேண்டாம்" என்று இடையிடையே நமக்கு ஞாபகப் படுத்துகிறார்கள்.

ஒரு மந்திரி அடிக்கடி "சிலர் சொல்வது போல் இது அற்பாயுள் மந்திரி சபையல்ல; நீடித்து நெடுங்காலம் சிரஞ்சீவியாக வாழப் போகிற சபை" என்று சொல்லிக் கொண்டே போகிறார்.

பொதுஜன மந்திரிகள் பொதுஜன ஒத்துழைப்பையும் உதவியையும் இவ்வளவு பரிதாபக் குரலில் கேட்க வேண்டிய அவசியமில்லை. பொது ஜனங்களுக்கு நன்மையான திட்டங்களை வகுத்து நிறைவேற்ற அவர்கள் கடமைப்பட்டவர்கள். அவர்கள் தங்கள் கடமையைச் சரிவர நிறைவேற்றினால் பொது ஜனங்கள் ஒத்துழைத்து உதவி செய்தே தீருவார்கள். தங்களுடைய சொந்த நன்மைக்கான காரியங்களில் பொது ஜனங்கள் ஏன் ஒத்துழைக்க மறுக்கிறார்கள்?

சென்ற தடவை நமது மாகாணத்தில் காங்கிரஸ் மந்திரி சபை ஏற்பட்டபோது ஜனங்கள் அடைந்திருந்த குதூகலத்தையும் இப்போது ஏற்பட்டிருக்கும் அழுது வடியும் நிலைமையையும் ஒத்திட்டுப் பார்க்க வேண்டும். அப்போது இம் மாகாண வாசி ஒவ்வொருவரும் நிமிர்ந்த மார்புடனும் பூரித்த தோள்களுடனும் நடந்தார்கள். இன்றைக்கோ உற்சாகமின்றிக் குனிந்த தலையோடு நடக்கிறார்கள்.

இதற்குக் காரணம் அனைவரும் அறிந்ததே. எந்த மகாத்மா காந்தியின் பெயரைச் சொல்லியும், எந்தக் காங்கிரஸ் தலைவர்களின் சிபார்சைப் பெற்றும் நமது மந்திரிகள் சட்ட சபை அங்கத்தினர் ஆனார்களோ, அத்தகைய மகாத்மா காந்தி முதலிய தலைவர்களின் புத்திமதியைப் புறக்கணித்து அவர்கள் மந்திரி பதவிகளுக்கு வந்திருக்கிறார்கள்.

இது காரணமாகவே காரியக் கமிட்டியின் ஆதரவும் பக்க பலமும் இப்போதுள்ள சென்னை மந்திரி சபைக்கு இல்லாமற் போய் விட்டது.

ஆகையினால்தான் புது மந்திரிகள் விஷயத்தில் பொது ஜனங்களுக்கு உற்சாகமில்லை; புது மந்திரிகளும் சோகக் குரலில் பிரலாபிக்கவேண்டியிருக்கிறது.

இத்தகைய நிலைமையில் அபிவிருத்தி ஏற்படுவதற்கு வெறும் பேச்சும் பிரலாபமும் மட்டும் போதாது. புது மந்திரிகள் பொது நன்மைக்குரிய சரியான திட்டங்களைத் தீர்மானித்துக் கொண்டு அத் திட்டங்களைக் காரியத்தில் சரிவர நிறைவேற்ற வேண்டும்.

ஆனால் நமது மந்திரிகளோ இது வரையில் தங்களுடைய சம்பள விஷயம் ஒன்றைப் பற்றித்தான் திட்டமாகத் தீர்மானம் செய்திருப்பதாகத் தெரிய வருகிறது.

மற்றப்படி பொதுஜன நன்மைக்கான விஷயங்களைப் பற்றிப் புது மந்திரிகள் இன்னும் உருப்படியான திட்டம் ஒன்றையும் வெளியிடவில்லை.

முக்கியமாக, நாட்டில் இப்போது ஏற்பட்டிருக்கும் உணவு நெருக்கடியைக் குறித்து நமது மதி மந்திரிகள் இதுவரையில் உபயோகமான யோசனை ஒன்றுகூடச் சொல்லவில்லை. "உணவைப் பெருக்க வேண்டும்! ரொம்ப ரொம்ப அதிகமாகப் பெருக்க வேண்டும்! மிக மிகச் சுறுசுறுப்பாக உணவுப் பயிர்களை அதிகமாக்க வேண்டும்!" என்று பேசியிருப்பதைத் தவிர உணவுப் பயிரை அதிகமாக்குவதற்குக் காரிய சாத்தியமான திட்டம் எதையும் சொல்லவில்லை. மந்திரிகளைக் காட்டிலும் மந்திரிகளல்லாத பொதுஜன ஊழியர்களும் விவசாயத் தலைவர்களும் திட்டமான அபிப்பிராயங்களையும் யோசனைகளையும் வெளியிட்டிருக்கிறார்கள்.

தஞ்சை-திருச்சி ஜில்லா எம்.எல்.ஸி. ஸ்ரீ கே. எம். தேசிகர் வெளியிட்டிருக்கும் அறிக்கையில் சில முக்கியமான யோசனைகளை வெளியிட்டிருக்கிறார். தஞ்சை ஜில்லா மிராசுதார்கள் சட்ட மந்திரி ஸ்ரீ பாஷ்யத்திடம் சமர்ப்பித்த விக்ஞாபனங்களிலும், கல்வி மந்திரி ஸ்ரீ அவிநாசிலிங்கம் கோயமுத்

ஊரில் நடத்திய விவசாயிகள் கூட்டத்திலும் சில நல்ல யோசனைகள் தெரிவிக்கப்பட்டிருக்கின்றன. அந்த யோசனைகளை இங்கே வரிசைக் கிரமமாகக் குறிப்பிடுகிறோம்.

(1) நிலவரியை நாலாவது பசலிக்கு 100க்கு 50 விகிதமாவது குறைக்கவேண்டும் என்று தஞ்சை மிராசுதார்கள் கோருகிறார்கள்.

இந்தக் கோரிக்கையின் நியாயம் நமது மந்திரிகளின் புத்திக்குப் புலனாகாவிட்டால் அவர்களைக் கடவுள்தான் காப்பாற்ற வேண்டும்.

தஞ்சை ஜில்லாவில் இந்த வருஷம் மகசூல் 100-க்கு 50 பங்குக்கும் குறைவு என்பது சர்க்காரே ஒப்புக்கொண்ட விஷயம். பஞ்ச நிலைமைக்கே அதுதான் காரணம். அப்படியிருக்கும்போது நிலவரியை முழுதுமே ரத்து செய்திருக்க வேண்டும்; குறைந்த பட்சம் பாதியாவது வஜா செய்யவேண்டும். இதைப் பற்றிக் கேட்பதற்கே அவசியம் இருந்திருக்கக் கூடாது. சர்க்காரே செய்திருக்க வேண்டியது. இப்போது கேட்ட பிறகாவது உடனே செய்யவேண்டும்.

(2) சம்பா நெல் சாகுபடியாகும் நிலங்களில் குருவை சாகுபடி செய்தால் அந்த ஏக்கருக்கு 25 ரூபாய் விகிதம் சர்க்கார் நன்கொடை அளிக்கவேண்டும் என்று ஸ்ரீ தேசிகர் எம். எல். சி. யோசனை சொல்லியிருக்கிறார்.

உணவுப் பொருள் உற்பத்திக்கு நன்கொடை அளிப்பதன் நியாயத்தையும் அவசியத்தையும் ஏற்கனவே சென்னை சர்க்கார் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள்.

புன்செய் நிலத்தில் கோடை காலத்தில் உணவுப் பயிர் செய்கிறவர்களுக்கு ஏக்கருக்கு ரூ. 15 விகிதம் நன்கொடை தர ஒப்புக்கொண்டிருக்கிறார்கள்.

புன்செய் நிலத்தைவிட நன்செய் நிலத்தில் உணவுப் பொருள் அதிகமாக உற்பத்தியாகும் என்பது நமது மந்திரிகளுக்குத் தெரிந்தேயிருக்கும்.

ஒரு நிலத்தில் சம்பா சாகுபடி செய்தால் தை மாசியில் அறுவடை. குருவை சாகுபடி செய்தால் ஐப்பசியில் அறுவடை. மறுபடியும் மற்றொரு போகம் சம்பாப் பயிரும் செய்யலாம்.

அப்படியிருந்தும் சாதாரணமாய்த் தஞ்சாவூர் ஜில்லாவில் இரண்டு போகம் ஏன் பயிரிடுவதில்லை யென்றால், அதிலுள்ள சிரமங்களினால்தான்.

இரண்டு போக சாகுபடிக்கு நிலத்தில் ஏராளமான எருப் போடவேண்டும். உழைப்பு அதிகம் தேவை. நிலவரியும் அதிகம். மொத்தத்தில் இரு போகத்தை விட ஒரு போகமே லாபகரம் என்று கண்டுதான் பெரும்பாலான நன்செய் நிலங்களில் ஒரு போக சாகுபடி செய்கிறார்கள்.

இந்த வருஷம் குருவை சாகுபடியை அதிகமாக்கினால் மூன்று மாதத்தில் நெல் கைக்கு வரும். பஞ்சத்தைச் சமாளிக்க ரொம்ப ஒத்தாசையாயிருக்கும்.

நல்ல வேளையாக, சட்ட மந்திரி ஸ்ரீ கே. பாஷ்யம் இதைத் தெரிந்துகொண்டிருக்கிறார். தஞ்சை ஜில்லா சுற்றுப் பிரயாணத்தில், "குருவைப் பயிரை அதிகமாகச் செய்யுங்கள்!" என்று மிராசுதார்களைக் கேட்டுக்கொண்டிருக்கிறார்.

ஆனால் அவ்விதம் வெறுமனே கேட்டுக் கொண்டதனால் மட்டும் குருவை நெல் அதிகமாகப் பயிராகி விடாது! மிராசுதார்களோடு மந்திரிகள் ஒத்துழைக்க வேண்டும்.

ஸ்ரீ தேசிகருடைய யோசனை பேஷான யோசனை. புன்செயில் விளையும் கம்புக்கு ஏக்கராவுக்கு 15 ரூபாய் நன்கொடை கொடுப்பது நியாயமானால் நன்செயில் விளையும் குருவைக்கு ஏக்கராவுக்கு 25 ரூபாய் நன்கொடை அளித்தல் மிகவும் நியாயமாகும்.

(3) உணவுப் பயிர்களுக்கு அவசியமான உரத்தைச் சர்க்கார் பொறுப்பில் சப்ளை செய்ய வேண்டும் என்று மிராசுதார்கள் கோருகிறார்கள்.

மந்திரி சபை ஏற்படுவதற்கு முன்னால் அட்வைஸரி சர்க்காரின் காலத்தில் உணவுக் கமிஷனர் மிஸ்டர் டிக்ஸன் ஒரு அருமையான காரியத்தைச் செய்யப் போவதாகச் சொன்னார்.

மலையாளத்தில் குறைந்த காலத்தில் பயிர் செய்யக்கூடிய நிலங்களில் சர்க்காரே உரத்தைக் கொண்டு போய்ப் போடப் போவதாக அறிவித்தார்.

மலையாளத்தில் செய்ததை தஞ்சை திருச்சி முதலிய மற்ற நன்செய் நிலப் பிரதேசங்களிலும் செய்ய வேண்டும். சர்க்காரே உரம் வாங்கிச் சேகரித்துக் குருவைப் பயிர் நிலங்களில் சர்க்கார் அதிகாரிகளைக் கொண்டே எருவைப் போடச் செய்ய வேண்டும்.

(4) நெல்லுக்குச் சர்க்கார் நிர்ணயம் செய்திருக்கும் விலை மிகக் குறைவு என்றும், அதைக் கொஞ்சம் உயர்த்தி நிர்ணயிக்க வேண்டும் என்றும் எல்லா இடங்களிலும் விவசாயிகள் வற்புறுத்திக் கோருகிறார்கள்.

இதைக் கேட்டவுடனே ஏதோ நியாயமற்ற கோரிக்கை யென்று தோன்றும். ஆனால் யோசித்துப் பார்த்தால் மேற்படி

கோரிக்கையில் அநியாயம் ஒன்றும் இல்லையென்பது தெரியும்.

விவசாயிகள் வாங்க வேண்டியதாயிருக்கும் மற்ற எல்லாச் சாமான்களின் விலையும் அசாத்தியமாய் உயர்ந்திருக்கும்போது, நெல் விலையை மட்டும் குறைவாக நிர்ணயித்திருப்பது அநீதமேயாகும்.

அதனால்தான் அதிகப்படியான நெல்லை விற்பதற்கு விவசாயிகளுக்கு மனம் வருவதில்லை. கட்டாய வாங்கல் திட்டம் அமுல் நடத்த வேண்டியிருக்கிறது. மொத்தத்தில் விவசாயிகளின் உற்சாகம் குறைகிறது. உணவுப் பொருள் உற்பத்தி தடைப்படுகிறது. ''உழைத்துப் பாடுபட்டு உண்டாக்கும் தானியத்துக்கு நியாயமான விலை கிடைக்கவில்லை. கட்டாயப் படுத்திக் குறைந்த விலைக்குக் கொண்டு போகிறார்கள்'' என்ற எண்ணம் விவசாயிக்கு இருந்தால், அவனுக்கு விவசாயத்தில் உற்சாகம் எப்படி இருக்கும்? உணவுப் பொருள் உற்பத்தி எப்படிப் பெருகும்?

நெல் விலையை உயர்த்தினால் நெல்லோ, அரிசியோ வாங்கிச் சாப்பிடுகிறவர்கள் கஷ்டப்படுவார்களே என்று தோன்றலாம். அவ்விதம் எண்ணித்தான் புதிதாக வந்திருக்கும் சென்னைக் கவர்னர் துரை விஷயத்தைச் சரிவரத் தெரிந்து கொள்ளாமல் ''நெல் விலையை உயர்த்துவது அநியாயம்'' என்று அபிப்பிராயம் தெரிவித்து விட்டார்.

நெல் வாங்கும் விலையை உயர்த்தச் சொல்கிறோமே தவிர, நெல் அல்லது அரிசி விற்கும் விலையை உயர்த்தச் சொல்லவில்லை.

விவசாயிகளிடம் நியாயமான உயர்ந்த விலை கொடுத்து நெல்லை வாங்கி, ஜனங்களுக்கு இப்போது விற்கப்படும் குறைந்த விலைக்கே விற்க வேண்டும் என்று சொல்கிறோம்.

மேற்கண்ட முறையைக் கையாண்டு அதில் ஏற்படும் நஷ்டத்தைச் சர்க்கார் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று பொள்ளாச்சி ஸ்ரீ வி. கே. பழனிசாமிக் கவுண்டர் சொல்லியிருக்கிறார். கொச்சி சமஸ்தானத்தில் இப்படிச் செய்து வருகிறார்கள் என்பதையும் உதாரணத்துக்கு எடுத்துக்காட்டியிருக்கிறார்.

தானியங்களை அதிக விலை கொடுத்து வாங்கி ஜனங்களுக்குக் குறைந்த விலைக்குக் கொடுக்க நேரலாம் என்பதை எதிர்பார்த்து அதற்காகவென்றே இந்த வருஷ பட்ஜெட்டில் ஒன்பது கோடி ரூபாய் அட்வைஸர் சர்க்கார் ஒதுக்கியிருக்கிறார்கள்.

மேற்படி ஒன்பது கோடி ரூபாயையும் அயல் நாட்டிலிருந்தும் அயல் மாகாணங்களிலிருந்தும் வரும் உபயோகமற்ற உளுத்த தானியங்களை வாங்குவதில் நஷ்டமடைவதற்குப் பதிலாக நமது மாகாணத்திலேயே தானியங்களுக்கு நல்ல விலை கொடுத்து வாங்குவதில் ஏன் செலவு செய்யக் கூடாது?

இப்படி அந்த ஒன்பது கோடியையும் சென்னை மாகாண விவசாயிகளுக்கே உதவுவது என்று தீர்மானித்தால், மூன்று மாதத்துக்குள் வேண்டிய தானியம் இந்த மாகாணத்திலேயே விளைந்து விடும். பஞ்சம் பறந்து போகும்.

(5) தானியங்களைக் கட்டாயப்படுத்தி வாங்கும் விஷயத்தில் விதைக்கும் தக கூலிக்கும் வேண்டியதை (ஏக்கராவுக்கு ஒன்பது கலம் வீதம்) நிறுத்திவிட்டுப் பாக்கியைத்தான் சர்க்கார் வாங்க வேண்டும் என்று மிராசுதார்கள் கோருகிறார்கள்.

இதுவும் மிக நியாயமான கோரிக்கை. விதை-தக கூலிக்கு நிறுத்தாமல் எல்லா நெல்லையும் வாங்கி விட்டால் அடுத்த வருஷம் எப்படி சாகுபடி நடக்கும்? (தக கூலி என்பது வயலில் வேலை செய்யும் ஆட்களுக்குக் கொடுக்க வேண்டிய தானியக் கூலி.) இந்த விஷயத்தை அறிந்து கொள்வதற்கு அதி கூர்மையான அறிவு வேண்டியதில்லை.

(6) நீர்ப்பாசன வாய்க்கால்களைச் சரிவர மராமத்து செய்து தரவேண்டும், கால் நடைகளுக்குத் தீவனம் கிடைக்க ஏற்பாடு செய்யவேண்டும், விவசாயக் கருவிகள் கிடைக்க வகை செய்ய வேண்டும் என்பது போன்ற யோசனைகளும் சொல்லப்பட்டிருக்கின்றன.

ஆகவே, பஞ்ச விபத்தைத் தடுப்பதற்கும் உணவுப் பொருள் உற்பத்தியைப் பெருக்குவதற்கும் வேண்டிய யோசனைகள் நமது மந்திரிகளின் முன்னால் இருக்கின்றன. அவற்றைக் குறித்து அவர்கள் ஆலோசித்து உசிதமான முடிவுகளைச் செய்ய வேண்டும். செய்த முடிவுகளைக் காரியத்தில் நிறைவேற்ற வேண்டும்.

சுருங்கச் சொன்னால், உணவுப் பொருளை அதிகமாக உற்பத்தி செய்யும் விஷயத்தில் விவசாயிகளோடு மந்திரிகள் ஒத்துழைக்க வேண்டும்; உதவியும் செய்ய வேண்டும்.

இப்படித் தங்களுடைய கடமையைச் சரிவர நிறைவேற்றுவதை விட்டுவிட்டு நமது புதிய மந்திரிகள் அங்குமிங்கும் ஓடி அலைந்து, ''பொது ஜனங்களே! ஒத்துழையுங்கள்!'' என்று கேட்டுக் கொண்டிருப்பதில் யாதொரு பயனும் இல்லை. இத்தகைய வெறும் பேச்சினால் தானியம் அதிகமாக விளைந்து விடாது; பஞ்சமும் தீர்ந்து விடாது.

# சிவகாமியின் சபதம்

கல்கி



## அத்தியாயம் 42

## பயங்கரக் குகை

சேனாபதி பரஞ்சோதியிடம் ஒற்றர் தலைவன் சத்ருக்னன் என்றுமில்லாத பதை பதைப்போடு கூறிய வரலாறு பின்வருமாறு :—

சேனாபதியும் சக்கரவர்த்தியும் கட்டளையிட்டபடி சத்ருக்னனும் குண்டோதரனும் நகரத்துக்குள் போவதற்கு இரகசியச் சுரங்க வழி இருக்கிறதா என்று கோட்டையைச் சுற்றியுள்ள பிரதேசங்களில் தேட ஆரம்பித்தார்கள். காபாலிகர்களின் பலிபீடத்துக்கு அருகாமையிலுள்ள மேடும் பள்ளமுமான பாறைகளிலேதான் சுரங்க வழி இருந்தால் இருக்கவேணுமென்று அந்தப் பாறைகளிலேயெல்லாம் நுணுக்கமாகத் தேடிக் கொண்டிருந்தார்கள். அப்படித் தேடி வரும்போது ஒரு நாள் இரவில் ஏதோ தீ எரிவதைப் பார்த்து அதன் அருகே சென்றார்கள். தீயின் அருகில் ஒரு மனிதனும் ஒரு ஸ்திரீயும் காணப்பட்டனர். அந்த மனிதன் நாகநந்தி பிக்ஷு என்று தெரிந்தது. ஸ்திரீயோ பயங்கரத் தோற்றங் கொண்ட காபாலிகை. அவர்களுடைய சம்பாஷணையை மறைந்திருந்து ஒட்டுக் கேட்டதில் விளக்கமாக ஒன்றும் தெரியவில்லை. ஆனால் புலிகேசி, சிவகாமி என்ற பெயர்கள் அடிக்கடி கேட்டன. காபாலிகையைத் தமக்காக ஏதோ ஒத்தாசை செய்யும்படி நாகநந்தி கேட்டுக் கொண்டிருந்ததாக மட்டும் தெரிந்தது. பொழுது விடியும் சமயத்தில் பிக்ஷுவும் காபாலிகையும் ஒரு குகையை மூடியிருந்த பாறையை உருட்டித் தள்ளிவிட்டுக் குகைக்குள்ளே போனார்கள். அவர்கள் உள்ளே போனதும் குகைத் துவாரம் மறுபடியும் மூடப்பட்டது.

சத்ருக்னனும் குண்டோதரனும் வெகு நேரம் காத்திருந்து பார்த்த பிறகு அந்தப் பாறையைத் தாங்களும் பெயர்த்துத் தள்ளி விட்டுக் குகைக்குள்ளே போகலாமென்று எண்ணினார்கள். அதே சமயத்தில் உட்புறமிருந்து பாறை அசைக்கப்பட்டதைக் கண்டு நல்ல வேளையாக ஓடி ஒளிந்து கொண்டார்கள். காபாலிகை மட்டும் வெளியில் வந்தாள். அவள் குகை வாசலை விட்டு அப்பால் போகும் சமயத்தில் குகைக்குள்ளே போய்ப் பார்க்கலாம் என்று காத்திருந்தார்கள். பகலெல்லாம் அவள் குகைத் துவாரத்தை விட்டு அசையவில்லை. சாயங்கால வேளையில் அவள் கொஞ்சம் அப்பாற்போன சமயம் குண்டோதரனை வெளியில் நிறுத்திவிட்டு சத்ருக்னன் மட்டும் குகைக்குள் நுழைந்தான். அப்பா! அந்தக் குகையின் பயங்கரத்தை நினைத்தால் இனிமேல் வாழ்நாள் முழுதும் இரவில் தூக்கமே வராது. அப்படி மனிதரின் மண்டை ஓடுகளும் எலும்புகளும் அங்கே குவிந்து கிடந்தன. நாற்றமோ சகிக்க முடியவில்லை. குகைக்குள்ளே ஒரே இருட்டாயிருந்தபடியால் அதற்குள் சுரங்க வழி இருக்கிறதா என்பதைக் கண்டு பிடிக்க முடியவில்லை. திடீரென்று கொஞ்சம் தெரிந்த வெளிச்சமும் மறைந்து விட்டது. சத்ருக்னன் தான் நுழைந்து வந்த துவாரம் எங்கே என்று பார்த்தான். துவாரம் இருந்த இடம் தெரியவில்லை. காபாலிகை வெளியில் இருந்தபடியே

குகைத் துவாரத்தை அடைத்து விட்டாள் என்று ஊகித்ததும் அவன் அடைந்த திகிலைச் சொல்ல முடியாது. கபாலங்களும் எலும்புகளும் குப்பிருட்டும் துர்நாற்றமும் நிறைந்த அந்தப் பயங்கரக் குகைக்குள்ளே அவன் எத்தனை நேரம் கழித்தானோ தெரியாது. எவ்வளவோ முயற்சி செய்தும் துவாரம் இருந்த இடத்தையே கண்டு பிடிக்க முடியவில்லை.

நாலு யுகங்கள் என்று தோன்றிய காலம் அவன் அந்த இருண்ட குகைக்குள்ளே அங்குமிங்கும் பயனின்றி அலைந்து உழன்ற பிறகு திடீரென்று சிறிது வெளிச்சம் ஒரு பக்கத்தில் காணப்பட்டது. குகையின் துவாரம் திறந்தது. காபாலிகை உடனே உள்ளே நுழைந்தாள். அவள் கையில் ஒரு மனித கபாலமும் எலும்புகளும் கொண்டு வந்தாள். சத்ருக்னன் குகையின் ஒரு கோடியில் சென்று பாறைச் சுவரோடு சுவராக ஒட்டிக் கொண்டு நின்றான். காபாலிகை கையில் கொண்டுவந்த கபாலத்தையும் எலும்புகளையும் ஓரிடத்தில் தனியாகப் பத்திரப்படுத்தி வைத்தபிறகு, குகையின் மத்தியில் தரையில் உட்கார்ந்து ஒரு பெரிய பாறாங் கல்லைப் பெயர்த்தாள். பெயர்த்த இடத்தில் அவள் இறங்கியபோது, அதுதான் சுரங்க வழியாயிருக்க வேண்டும் என்று சத்ருக்னன் ஊகித்துக் கொண்டான். இத்தனை நேரம் அந்தப் பயங்கரக் குகையில் ஆகாரம் தண்ணீர் இன்றிக் காத்திருந்தது வீண் போகவில்லை என்று எண்ணிச் சந்தோஷப்பட்டான். சுரங்கத்தில் இறங்கிய காபாலிகை தன் மனதை மாற்றிக் கொண்டாள் என்று தோன்றியது. மறுபடியும் மேலே ஏறினாள். திறந்த சுரங்க வாயை மறுபடியும் மூடிவிட்டு அதன்மேல் படுத்துத் தனக்குத் தானே பேசிக் கொண்டிருந்தாள். அவளுடைய பேச்சிலிருந்து சில முக்கிய விஷயங்கள் தெரியவந்தன. அவள் நாகநந்தி என்கிற புத்த பிக்ஷுவைக் காதலித்தாள் என்றும், அதன் காரணமாகச் சிவகாமியைத் துவேஷித்தாள் என்றும், புலிகேசி இறந்து விட்டான் என்றும், அவனுடைய எலும்பையும் கபாலத்தையும் தான் அவள் சற்று முன் குகைக்குள் கொண்டு வந்தாள் என்றும், நாகநந்தி பிக்ஷு புலிகேசியைப்போல் வேஷம் போட்டு நடித்து வாதாபி சக்கரவர்த்தியாகி சிவகாமியைச் சக்கரவர்த்தினியாக்க விரும்புகிறார் என்றும், அதைத் தடுக்க இந்தக் காபாலிகை கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறாள் என்றும் தெரிந்தது. வெகு நேரம் இப்படி அவள் தனக்குத்தானே பிதற்றிக் கொண்டிருந்த பிறகு மௌனமானாள். அவள் தூங்குகிறாள் என்று எண்ணிய சத்ருக்னன் அந்தச் சமயத்தில் தப்பித்து வெளியேறத் தீர்மானித்தான். திறந்திருந்த குகைத் துவாரத்தை நோக்கி மெள்ள மெள்ள அடிவைத்து நடந்தான். துவாரத்துக் கருகில் வந்ததும் விரைவாக அதில் நுழைந்து வெளியில் குதித்தான். குதித்த அதே சமயத்தில் அவனுடைய ஒரு கையைக் குகைக்குள்ளேயிருந்து யாரோ பற்றினார்கள்! சத்ருக்னன் திடுக்கிட்டுப் பார்த்தான். காபாலிகை குகையின் உட்புறத்தில் நின்றபடி அவனுடைய ஒரு கையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு பயங்கரமாக உறுமினாள். சத்ருக்னனுடைய சப்தநாடியும் ஒடுங்கி விட்டது. "செத்தோம்" என்று எண்ணிக்கொண்டான். ஆயினும் உயிரைக் காப்பாற்றிக்கொள்ளக் கடைசி முயற்சியாகக் கையைத் திமிறினான். காபாலிகையின் இரும்புப் பிடியிலிருந்து அவனால் விடுவித்துக் கொள்ள முடியவில்லை.

காபாலிகை அப்போது "லம்போதரா! லம்போதரா!" என்று கூவினாள். "இதோ வந்துவிட்டேன், தாயே!" என்று குண்டோதரன் பக்கத்துப் பாறை மறைவிலிருந்து ஓடி வந்ததைப் பார்த்ததும் சத்ருக்னனுக்கு வியப்பினால் வாய் அடைத்துப் போயிற்று. சத்ருக்னனைப் பார்த்துக் குண்டோதரன் கண்ணினால் சமிக்ஞை செய்து கொண்டே அவனருகில் ஓடி வந்தான். குகைக் குள்ளே நின்ற காபாலிகை "லம்போதரா! இந்தத் திருட்டு ஒற்றனைச் சற்றே பிடித்துக் கொள். கத்தியை எடுத்துக் கொண்டு வருகிறேன். விட்டுவிட மாட்டாயே?" என்றாள். "ஒரு நாளும் விடமாட்டேன், அம்மா! இவனை முதல் பலி நானே கொடுக்கப் போகிறேன்!" என்று சொல்லிச் சத்ருக்னனைக்

கெட்டியாகப் பிடித்துக் கொண்டான் குண்டோதரன். காபாலிகை உள்ளே சென்றாள். உடனே குண்டோதரன் சத்ருக்னனுக்குச் சமிக்ஞை காட்டிப் பிடியையும் தளர்த்த சத்ருக்னன் தன்னை விடுவித்துக் கொண்டு ஓடினான். குண்டோதரன் பெருங் கூச்சல் போட்ட வண்ணம் அவனைத் துரத்திக் கொண்டு ஓடினான். கொஞ்ச தூரத்தில் ஒரு பாறை மறைவுக்கு வந்ததும் குண்டோதரன் நின்று, "சுவாமி! உங்களுடைய கதி என்ன ஆயிற்று என்று தெரிந்து கொள்வதற்காக இந்தக் காபாலிகையின் சிஷ்யப் பிள்ளை ஆனேன். என்னைப் பற்றிக் கவலை வேண்டாம். நான் இங்கேயே நின்று இவளைச் சமாளித்துக் கொள்கிறேன். நீங்கள் சீக்கிரம் போங்கள். கோட்டைத் தாக்குதல் ஆரம்பமாகி விட்டதாகத் தோன்றுகிறது!" என்றான்.

"குகைக்குள்ளே சுரங்க வழி இருக்கிறது, குண்டோதரா! நான் போய்ச் சேனாபதியிடம் சொல்லி ஆட்களுடன் வந்து சேருகிறேன். அதுவரை நீ இந்த ராட்சஸியை எப்படியாவது சமாளித்துக் கொண்டிரு. அவளைச் சுரங்க வழியில் போக விடாதே!" என்று சத்ருக்னன் சொல்லி விட்டு ஓட்ட ஓட்டமாகச் சேனாபதியைத் தேடி ஓடி வந்தான். பிறகு குண்டோதரனுடைய கதி என்ன ஆயிற்று என்பது சத்ருக்னனுக்குத் தெரியாது.

* * *

மேற்கூறிய வியப்பும் பயங்கரமும் நிறைந்த வரலாற்றைக் கேட்டதும், சேனாபதி பரஞ்சோதி, "சத்ருக்னா! ரொம்பவும் அவசரமான சமயத்தில் இப்படிப்பட்ட முக்கிய செய்தியைக் கொண்டு வந்திருக்கிறாய். நன்றாய் யோசிப்பதற்குக்கூட நேரம் இல்லை. கோட்டைத் தாக்குதலோ ஆரம்பமாகிவிட்டது. நாளைப் பொழுது விடிவதற்குள் கோட்டைக்குள் பிரவேசித்து விடுவோம். எல்லாவற்றுக்கும் நீ நூறு வீரர்களுடன் அந்தக் காபாலிகையின் குகை வாசலுக்குப் போ! சுரங்க வழி மூலமாக யாரும் வெளியில் தப்பித்துக்கொண்டு போகாமல் பார்த்துக்கொள். மற்றப்படி நீயும் குண்டோதரனும் யோசித்து உசிதப்படி செய்யுங்கள். முடிந்தால் சுரங்க வழியாக உள்ளே வந்து சேருங்கள். கோட்டை வாசல் திறந்ததும் நான் நேரே சிவகாமி தேவியின் வீட்டுக்குச் செல்கிறேன். கண்ணபிரான் ரதத்தோடு என்னுடன் வருகிறான். கணேசரின் கருணை இருந்தால் சிவகாமி தேவியைக் காப்பாற்றி ஆயனரிடம் ஒப்புவிக்கும் பாக்கியம் நமக்குக் கிடைக்கும்!" என்று கவலையோடு கூறினார்.

## அத்தியாயம் 43

## வாதாபி தகனம்

மாமல்ல சக்கரவர்த்தி தமது கூடாரத்தின் வாசலில் நின்று மாபெரும் பல்லவ சைன்யம் வாதாபி கோட்டை மதிளை நெருங்கிச் செல்லும் காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்தார். தமது வாழ்நாளிலேயே மிக முக்கியமான சம்பவம், தம் கண் முன்னால் நடைபெறத் தொடங்கியிருக்கிறது என்பதை அவருடைய அந்தராத்மா அவருக்குச் சொல்லிக் கொண்டிருந்தது. அன்றிரவு நடக்கப் போகும் மகத்தான கோட்டைத் தாக்குதலின் காரணமாக ஆயிரமாயிரம் வருஷங்கள் வரையில் அவருடைய பெயர் 'வாதாபி கொண்ட நரசிம்மன்' என்று சரித்திரத்தில் பிரசித்தி பெற்று விளங்கப் போகிறது!

ஆனால் அவர் எந்த நோக்கங் காரணமாக இந்த மகத்தான சைன்யத்தைத் திரட்டிக் கொண்டு வந்தாரோ, அந்த நோக்கம் நிறைவேறுமா? சிவகாமிக்கு அவர் கொடுத்த வாக்குறுதி அன்றிரவோ மறுநாளோ அல்லது அதற்கு மறுநாளோ நிறைவேறுவது நிச்சயம். மூன்று நாளைக்குள்ளே வாதாபி கோட்டை தகர்ந்து வாதாபி நகரம் பற்றி எரிவதும் நிச்சயம். ஆனால், அதைப் பார்ப்பதற்குச் சிவகாமி உயிரோடிருப்பாளா? ஆஹா! அந்தப் பாவி உயிரோடிருந்து வாதாபி எரியுங் காட்சியைப் பார்த்து விட்டு வெளியேறி வந்தால்தான் என்ன? அவர்களுடைய வாழ்க்கை பழைய

ஆனந்த வாழ்க்கையாகப் போகிறதா? ஒரு நாளும் இல்லை. அவர்களுடைய மனோராஜ்ய மெல்லாம் ஒரு சிதைந்த கனவாகி விட்டது. ஒருவேளை அந்தச் சிதைந்த கனவிலே சிவகாமி சில சமயம் இன்பத்தைக் காணக்கூடும். தமக்கோ அதுகூடக் கிடையாது. தமது பிற்கால வாழ்க்கை ஒரு வறண்ட பாலைவனமாகவே இருக்கும். அந்த எல்லையற்ற நெடிய பாலைவனத்தில் கானல் நீரைத் தவிர வேறு குளிர்ச்சியான காட்சியே தென்படப் போவதில்லை!...

இவ்வித சிந்தனைகளில் ஆழ்ந்திருந்த மாமல்லர் தம்மிடம் முடிவாக விடை பெற்றுச் சென்ற சேனாபதி பரஞ்சோதி, மீண்டும் வருவதைக் கண்டு சிறிது வியப்புற்றவராய், அவர் தம் அருகில் நெருங்கியதும், "சேனாபதி! ஏதாவது புதிய விசேஷம் உண்டா?" என்று கேட்டார்.

"ஆம், பிரபு! சத்ருக்னன் திரும்பி வந்தான்" என்று சேனாபதி கூறி, அவன் சொன்ன விஷயங்களைச் சுருக்கமாகத் தெரிவித்தார்.

எல்லாவற்றையும் கேட்ட மாமல்லர், "இந்தச் செய்திகள் காரணமாக நமது யோசனையில் ஏதேனும் மாறுதல் உண்டா?" என்று கேட்டார்.

"விசேஷமாக ஒன்றுமில்லை, பிரபு! ஆனால் கோட்டைத் தாக்குதலைக் கூடிய விரைவில் நடத்தவேண்டிய அவசியம் அதிகமாகிறது. எதிரில் நின்று பாயும் புலியைக் காட்டிலும் காலடியில் நெளிந்து ஓடும் பாம்பு அதிக அபாயம் உள்ளதல்லவா?"

"அப்படியானால் காபாலிகையின் கதையை நீர் நம்புகிறீரா? உமக்கு ஓலை அனுப்பியது புலிகேசி இல்லை, நாகநந்தி பிக்ஷுதான் என்று நினைக்கிறீரா?"

"அப்படித்தான் தோன்றுகிறது. இதனால் சிவகாமி தேவியைப் பற்றிய கவலை அதிகமாகிறது."

"நானும் உங்களுடனே கோட்டைக்குள் வந்து விடட்டுமா?"

"வேண்டாம், பிரபு! தாங்கள் இங்கே இருப்பதுதான் உசிதம் என்று கருதுகிறேன். தாங்கள் ஒருவேளை கோட்டைக்குள் வரவேண்டி யிருந்தாலும் இருக்கலாம். அல்லது குகை வாசலுக்குப் போகவேண்டி யிருந்தாலும் இருக்கலாம். நானாவது சத்ருக்னனாவது செய்தி அனுப்பியதும் புறப்பட ஆயத்தமா யிருக்க வேண்டும்."

"அப்படியே யாகட்டும், சேனாபதி! ஒரு விஷயத்தை மறந்து விட வேண்டாம். புலியை விடப் பாம்பு கொடியது என்று நீர் கூறியது முற்றும் உண்மை. நாகநந்தி விஷயத்தில் தாட்சண்யமே பார்க்க வேண்டாம். அந்தக் கள்ள பிக்ஷு உயிரோடிருக்கும் வரையில் இந்த வாழ்க்கையில் நம் இருவருக்கும் நிம்மதி கிடையாது. இதை மறக்க மாட்டீர் அல்லவா?"

"மறக்கமாட்டேன், பிரபு!"

இதற்குப் பிறகும் சேனாபதி பேசாமல் தயங்கி நிற்பதைக் கண்டு மாமல்லர், "இன்னும் ஏதாவது சொல்வதற்கு இருக்கிறதா?" என்றார்.

"ஆம், இன்னும் ஒரே ஒரு விஷயம். தயவு செய்து மன்னிக்க வேண்டும். வாதாபி நகரை எரித்துவிட வேண்டும் என்ற கட்டளையில் மாறுதல் ஒன்றும் இல்லையே?"

"ஆ! இதென்ன கேள்வி மறுபடியும்?" என்று மாமல்லர் கோபக் குரலில் கேட்டார்.

"நகரைத் தீயிட்டுக் கொளுத்துவது அவசியந்தானா என்று கேட்கிறேன். புலிகேசி கூடத்தான் இறந்து விட்டானே? எதற்காக வீணில் இந்தப் பெரிய நகரத்தை..."

"சேனாபதி! போதும்! இந்த நிமிஷமே நான் கோட்டை வாசலுக்குப் போகிறேன். இனி உம்மை நம்பிப் பிரயோஜன மில்லை. நீர் திருநீறு தரித்து ருத்ராட்சம் அணிந்து சிவ பஜனை செய்யச் செல்லும்!"

"பிரபு! திருநீறு தரித்த பெருமான் திரிபுரத்தையும் எரித்தார். இந்த வாதாபியை எரிப்பது அவருக்குப் பெரிய காரிய மில்லை. இன்று இரவே இந்த வாதாபி நகரம் பற்றி எரிவதை உங்கள் கண்ணால் காண்பீர்கள்."

"அப்படியானால் ஏன் இந்தத் தயக்கம், கேள்வி எல்லாம்?"

"தங்களுடைய விருப்பத்தை நிச்சயமாகத் தெரிந்து கொள்வதற்காகத்தான். கோட்டைக்குள் புகுந்த பிறகு நகரை எரிக்க வேண்டும் என்று தாங்கள் கட்டளை யிட்டீர்கள். அதை

மாற்றிச் செய்ய விரும்புகிறேன். முதலில், வாதாபி தகனம் ஆரம்பமாகப் போகிறது. வெளியிலிருந்தபடியே தீப்பந்தங்களை நகருக்குள் எறியும்படி கட்டளையிடப் போகிறேன்."

"இதற்கு என்ன அவசியம்?"

"நகரத்துக் குள்ளேயிருந்து நமது வீரர்கள் கொண்டு வரும் பொருள்களில் பாதி அவரவர்களுக்கே சொந்தம் என்று சொல்லியிருக்கிறேன். ஆகையால் நகரம் பற்றி எரிவதைக் காணும்போது நமது வீரர்களின் வேகம் ஒன்றுக்குப் பத்து மடங்காகும். பிரபு! நாளைச் சூரியோதயத்துக்குள்ளே நான் இந்தக் கோட்டைக்குள்ளே பிரவேசித்தாக வேண்டும். அதற்கு மேல் தாமதித்தால் சிவகாமி தேவியைக் காப்பாற்றுவது அசாத்தியமாகி விடலாம். சூரியோதயமாகும் சமயத்தில் தாங்களும் ஆயத்தமாயிருக்க வேண்டும். இன்று ஓரிரவு தூங்காமல் வாதாபி தகனத்தைப் பார்த்துக் கொண்டிருங்கள்!" என்று சொல்லிவிட்டுச் சக்கரவர்த்தியின் மறுமொழிக்குக் காத்திராமல் சேனாபதி விரைந்து சென்றார்.

• • •

சேனாபதி சொன்னபடியே அன்றிரவு நடுநிசி நேரத்தில் வாதாபி தகனம் ஆரம்பமாயிற்று. கோட்டை மதிளைச் சுற்றி ஆங்காங்கு பெரிய உயரமான தூக்கு மரங்கள் நிறுத்தப்பட்டன. அந்த மரங்களின் மீது ஏறி நின்று அதற்கென்று பயிற்சி செய்யப்பட்டிருந்த பல்லவ வீரர்கள் கொளுத்தப்பட்ட தீப்பந்தங்களையும் கெந்தக வெடிகளையும் நகருக்குள் வீசி எறிந்தார்கள். தீப்பந்தங்கள் போகும்போதே காற்றினால் ஜுவாலை விட்டுக் கொண்டு சென்று விழுந்த இடங்களில் எல்லாம் தீ மூட்டின. கெந்தக வெடிகள் ஆங்காங்கு வெடித்து நெருப்பைப் பரப்பின.

அன்றிரவு மூன்றாம் ஜாமத்திற்குள் லட்சோப லட்சம் ஜனங்கள் வசித்த அந்த மா நகரத்தில் நாலா புறமும் தீ மூண்டு எரியத் தொடங்கியது.

அக்கினி தேவனுக்கு உதவி செய்ய வாயு பகவானும் வந்து சேர்ந்தார். மூண்டடித்த காற்றினால் தீயின் ஜுவாலைகள் குதித்துக் குதித்துப் பாய்ந்து வாதாபி நகரின் மாட மாளிகைகள் கூடகோபுரங்கள் எல்லாவற்றையும் விரைந்து கைப்பற்றி விழுங்கத் தொடங்கின.

தீயோடு புகையும் படலம் படலமாக எழுந்து எட்டுத் திசைகளையும் வானத்தையும் மறைத்தது.

அதே சமயத்தில் பல்லவ பாண்டிய வீரர்கள் கோட்டையை நாலாபுறமும் சூழ்ந்து கொண்டு மதிள்மீது ஏறிக் குதிக்க முயன்றார்கள். மதிள் மீதிருந்த சளுக்க வீரர்கள் அவர்களைத் தடுத்தார்கள். அவர்களுடைய வாளாலும் வேலாலும் அம்புகளாலும் தாக்கப்பட்டு ஆயிரமாயிரம் தமிழ் வீரர்கள் உயிரிழந்து விழுந்தார்கள். ஆயினும் சமுத்திரத்தில் பெருங் காற்று அடிக்கும்போது ஓர் அலைக்குப் பின்னால் இன்னொரு அலை இடைவிடாமல் வந்து கரையை மோதுவது போலத் தமிழ் வீரர்கள் மேலும் மேலும் வந்து கொண்டேயிருந்தார்கள்.

அதோடு, கோட்டையின் நாலு புறத்து வாசல்களும் பலமாகத் தாக்கப்பட்டன. ஏக காலத்தில் பத்துப் பன்னிரண்டு யானைகள் தங்கள் துதிக்கையினால் பிரம்மாண்டமான மரத் தூண்களையும் இருப்புலக்கைகளையும் தூக்கி அதி வேகமாகக் கோட்டை வாசல் கதவுகளின்மீது மோதியபோது அந்தக் கதவுகள் படார் படார் என்று தெறித்து முறிந்து விழுந்தன. அந்தத் தாக்குதலின் போது பூகம்பத்தினால் கட்டடங்கள் அதிர்வதுபோல் கோட்டை வாசல்களும் மதிள் சுவர்களும்கூட அதிர்ந்து பிளந்தன.

சேனாபதி பரஞ்சோதி சக்கரவர்த்தியிடம் கூறிய வண்ணம் அன்றிரவு நாலாம் ஜாமம் முடியும் தறுவாயில் வாதாபிக் கோட்டை வாசல்கள் திறந்து பல்லவ வீரர்கள் ஏற்கெனவே எரியத் தொடங்கியிருந்த வாதாபி நகருக்குள் பிரவேசித்தார்கள்.

கோட்டை மதிளைத் தாக்கிய பல்லவ வீரர்களும் நாலாபுறத்திலும் உள்ளே குதிக்கத் தொடங்கி விட்டார்கள்.

இந்தச் சரித்திரப் பிரசித்தி பெற்ற சம்பவத்தைக் கீழ் வானத்தில் உதித்திருந்த விடிவெள்ளி கண் கொட்டாமல் பார்த்து வியந்து கொண்டிருந்தது.

# மந்திரி பிழைத்தார்!

சாவி

இடம்: சர்க்கார் காரியாலயம்.
நேரம்: காலை பதினொரு மணி.

தொழில் மந்திரி ஸ்ரீ கிரி அவர்கள் தமது காரியாலய அறையில் உட்கார்ந்து "இண்டியன் எக்ஸ்பிரஸ்" பத்திரிகையைப் புரட்டுகிறார். ஒரு சின்னஞ் சிறு செய்தி அவர் கவனத்தைக் கவருகிறது.

**பட்டினிச் சாவு**

சென்னை, மே, 12—

45 வயதான ஒரு ஸ்திரீ சென்ற வெள்ளிக்கிழமையன்று சென்னை ஜெனரல் ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டு, அன்றே காலமானாள். மேற்படி ஸ்திரீ பட்டினி காரணமாக இறந்து போனதாகத் தெரிய வருகிறது.

மேற்படி செய்தியைப் படித்ததும் தொழில் மந்திரி கிரி அவர்கள் சிறிது நேரம் தேள் கொட்டியவர் போல் துடிதுடித்தார். பிறகு, "அடாடா! இது என்ன கஷ்டம்! இது என்ன சோதனை!" என்று தவிக்கலானார்.

சட்டசபைக் காங்கிரஸ் கட்சிக் கூட்டத்தின்போது பொது ஜனங்களுக்குத் தாம் வாக்குத் தத்தம் செய்து கொடுத்த ஒரு விஷயம் அவருக்கு ஞாபகம் வந்ததுதான் இவ்வளவு திகைப்புக்கும் தவிப்புக்கும் காரணமாயிருந்தது.

கடைசியாக அந்த வாக்குத் தத்தத்தை நிறைவேற்றும் பொருட்டுத் தொழில் மந்திரி உயிரை விடத் தீர்மானித்தார். என்றாலும், அவருடைய அந்தராத்மா அடாடா! இப்போதுதானே மந்திரியாக வந்தோம்! வந்து ஒரு மாதச் சம்பளம்கூட வாங்கவில்லையே? இதற்குள் உயிரை விட்டுவிட வேண்டி வருகிறதே?" என்று ஒரு கணம் அடித்துக்கொண்டது. கடைசியில் "சட்! சொன்ன சொல் மீறுவதா? இது காங்கிரஸ் மந்திரிகளுக்கு அழகா? கவர்னரைப் பார்த்து விஷயத்தைச் சொல்லிவிட்டு உயிரை விட வேண்டியதுதான்" என்ற முடிவுக்கு வந்தார்.

★

இடம்: கவர்னர் மாளிகை.

கவர்னர்:—வாரும், தொழில் மந்திரியவரே! எங்கே வந்தீர்?

தொழில் மந்திரி:—இன்றைய பத்திரிகையைப் பார்த்தீர்களா?

கவர்னர்:—பார்த்தேன்; துயரமான சம்பவம்தான். ஆனால் போனதைப் பற்றி என்ன செய்ய? இனிமேல் நடக்க வேண்டியதைப் பற்றி யோசிக்க வேண்டும்.

தொழில் மந்திரி:—என்ன அப்படிச் சொல்கிறீர்கள்? சட்டசபைக் கட்சிக் கூட்டத்தின்போது நான் ஒரு வாக்குத் தத்தம் செய்துவிட்டேனே, தெரியாதா? 'பஞ்சம் பட்டினி காரணமாக சென்னை மாகாணத்தில் ஒரு ஆளைக்கூடச் சாகவிடமாட்டோம். அப்படி ஒரு ஆள் சாவதாயிருந்தாலும் கட்சி அங்கத்தினர்களாகிய 196 பேரும் உயிரை விடுவோம்' என்றல்லவா சொல்லியிருக்கிறேன்?

கவர்னர்:—அப்படியா? அது எனக்குத் தெரியாதே? இப்போது என்ன செய்வதாக உத்தேசம்?

தொழில் மந்திரி:—உத்தேசம் என்ன? சொன்ன சொல்லை நிறைவேற்ற வேண்டியதுதான்.

கவர்னர்:—அப்படியா? 196 பேருமா?

தொழில் மந்திரி:—மற்றவர்களைப் பற்றி எனக்குப் பொறுப்பில்லை. என் வரையில் உயிரை விடவே போகிறேன்.

கவர்னர்:—உங்கள் இஷ்டம்.

தொழில் மந்திரி:—ஆனால் ஒரு விஷயம் கவலையை அளிக்கிறது. மந்திரியாவதற்காக ராஜவிசுவாசப் பிரமாணம் எடுத்துக் கொண்டிருக்கிறேனல்லவா? அதற்கு இது விரோதமில்லையா?

கவர்னர்:—அதைப் பற்றிக் கவலை வேண்டாம். ஏதாவது விரோதம் இருந்தாலும் நான் பார்த்துக் கொள்கிறேன். சொன்ன சொல்லை நிறைவேற்றுவதுதான் பிரதானம்......அடாடா! இந்தியர்கள் என்றால் எப்படியோ அல்லவா நினைத்துக் கொண்டிருந்தேன்?

[தொழில் மந்திரி, கவர்னர் மாளிகையை விட்டு வெளியேறுகிறார். அவர் கண்களில் பளபளவென்று ததும்புவது கண்ணீரா அல்லது ஆனந்த பாஷ்பமா என்று தெரியவில்லை.]

★

இடம்:—பிரதம மந்திரி அறை.
நேரம்:—109 டிகிரி வெய்யில் நேரம்.

*[பிரதம மந்திரி பிரகாசம் முன்னிலையில் தொழில் மந்திரி கிரி நிற்கிறார்.]*

பிரகாசம்:—எங்கே வந்தீர்? ஒரு வேலை எதற்காகவாவது வரச் சொல்லியிருந்தேனா?

கிரி:—இல்லை; நானாகத்தான் வந்தேன். 'சென்னை மாகாணத்தில் ஒரு ஆளைக் கூடப் பஞ்சத்தினாலோ பட்டினியாலோ சாக விடமாட்டோம். அம்மாதிரி ஒருவன் இறக்கு முன்னால் 196 சட்ட சபை அங்கத்தினர்களும் உயிரை விடுவோம்' என்று சட்டசபைக் கட்சிக் கூட்டத்தின் போது நான் வாக்குத் தத்தம் செய்து விட்டேன். இப்போது சோதனையாக ஜெனரல் ஆஸ்பத்திரியில் ஒரு ஸ்திரீ பட்டினியால் செத்துப் போயிருக்கிறாள். ஆகவே, என் சொற்படி நாம் அனைவரும் உயிரை விட்டு விட வேண்டும்.

பிரகாசம்:—என்ன, என்ன! என்ன சொன்னீர்? உயிரை விடுவதா? என்ன உளறுகிறீர்? வெய்யில் கொடுமையோ? பதவிக்கு வந்து பத்து நாட்கள்கூட ஆகவில்லை. இரண்டு மந்திரி ஸ்தானங்களையும் பதின்மூன்று பார்லிமெண்டரி காரியதரிசி ஸ்தானங்களையும் பூர்த்தி செய்யவில்லை. இதற்குள் செத்துப் போவதாம். உமக்கு ஏதாவது மூளைக் கோளாறு? அப்படியானால் வைத்திய மந்திரி ருக்மணி லட்சுமிபதியிடம் செல்லும். அவர் உமக்கு வேண்டிய சிகிச்சைக்கு ஏற்பாடு செய்வார்.

கிரி:—இல்லை, இல்லை. உண்மையாகவே நம் எல்லாருடைய சார்பாகவும் நான் வாக்குத் தத்தம் செய்திருக்கிறேன். இப்போது உயிர் விடுவதைத் தவிர நமக்கு வேறு வழியில்லை.

பிரகாசம்:—அதெல்லாம் எனக்குத் தெரியாது. நீர் அப்படிச் சொன்னதாக எனக்கு ஞாபகமில்லை. எங்களைக் கேட்காமல் நீராகச் சொன்ன விஷயத்துக்கு நாங்கள் ஜவாப்தாரியல்ல. உம்முடைய வாக்குறுதியை நீர் நிறைவேற்றுவதில் எனக்கு ஆட்சேபனை கிடையாது.

*[தொழில் மந்திரி கிரி, "ஆ! இது என்ன உலகம்!" என்று சொல்லிக்கொண்டு வெளியேறுகிறார்.]*

★

இடம்:—வைத்திய மந்திரி அறை.

வைத்திய மந்திரி:—எங்கே வந்தீர்கள், கிரியாரே!

தொழில் மந்திரி:—சென்ற வெள்ளிக்கிழமை இரவு ஜெனரல் ஆஸ்பத்திரியில் 45 வயதான ஸ்திரீ ஒருத்தி பட்டினியால் இறந்துபோய் விட்டாளாம். 'பஞ்சத்தால் யாரையும் சாக விடோம்; அப்படிச் சாவதாயிருந்தால் 196 சட்ட சபை மெம்பர்களும் முதலில் இறப்போம்' என்று வாக்குறுதி கொடுத்திருக்கிறேன். அது விஷயமாகத்தான் தங்களைப் பார்க்க வந்தேன்.

வைத்திய மந்திரி:—அது விஷயமாக என்னைப் பார்க்க வருவானேன்? நான் என்ன செய்ய வேண்டும்?

தொ. ம:—உயிரை விடுவதற்கு வழி ஒன்றும் தெரியவில்லை. உங்களைக் கேட்கலாம் என்று வந்தேன்.

*[வைத்திய மந்திரி ஆழ்ந்து யோசிக்கிறார்.]*

வை. ம:—அந்த ஸ்திரீ பட்டினியால் இறந்து போனாள் என்பது வாஸ்தவமா? நான் முதன் முதலில் சென்னை மாகாணத்துக்கு ஸ்திரீ மந்திரியாக வந்திருக்கிறேன். ஒரு ஸ்திரீ எப்படிப் பட்டினியால் செத்திருக்க முடியும்?

தொ. ம:—அது எப்படியோ, தெரியாது. இன்று காலைப் பத்திரிகையில் போட்டிருந்தது.

வைத்திய மந்திரி:—சற்றுப் பொறு... விசாரித்துச் சொல்லுகிறேன்.

*[டெலிபோன் செய்து ஸர்ஜன் ஜெனரலைக் கூப்பிடுகிறார்.]*

வைத்திய மந்திரி:—ஹல்லோ, வெள்ளிக்கிழமை இரவு ஒரு ஸ்திரீ பட்டினியால் ஆஸ்பத்திரியில் இறந்து போனதாகச் செய்தி வந்திருக்கிறதே! அது வாஸ்தவமா? நான் முதன் முதலில் ஸ்திரீ மந்திரியாக வந்திருக்கும்போது ஒரு ஸ்திரீ பட்டினியால் செத்துப் போயிருக்க முடியுமா?

ஸர்ஜன்:—பொய், பொய். சுத்தப் பொய். அந்த ஸ்திரீ பட்டினியால் இறக்கவில்லை. பஞ்சத்தாலும் இறக்கவில்லை. பசிப்பிணி என்கிற வியாதியினால்தான் இறந்து போனாள்.

வைத்திய மந்திரி:—என்ன? பசிப்பிணியால் இறந்து போனாளா? அப்படியென்றால் பஞ்சத்தாலோ பட்டினியாலோ இறக்கவில்லையா?

ஸர்ஜன்:—இல்லை; இல்லை.

வைத்திய மந்திரி:—அப்பாடா! பிழைத்தோம், தப்பினோம்; ஆஸ்பத்திரியில் இறந்த ஸ்திரீ பட்டினியால் இறக்கவில்லையாம். பஞ்சத்தாலும் இறக்கவில்லையாம். பசிப்பிணியினால்தான் இறந்து போனாளாம். நல்ல வேளையாக இந்தக் கண்டத்திலிருந்து தப்பிப் பிழைத்தோம். சந்தோஷமாகப் போய் வாரும்.

*[தொழில் மந்திரி பெருமூச்சு விட்டு தம்மை ஆசுவாசப் படுத்திக்கொள்கிறார். பின்னர் ... சோடா சாப்பிட்டு விட்டு "செத்தேன் பிழைத்தேன்" என்று தமது அறையைப் பார்த்து நடையைக் கட்டுகிறார்.]*



# தர்மபுத்திரன்

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

யாதவர்களின் முடிவைப் பற்றியும் மாதவன் மறைந்து போனதைப் பற்றியும் அஸ்தினபுரத்துக்குச் செய்தி வந்தது. அதைக் கேட்டதும் பாண்டவர்களுக்கு உலக வாழ்க்கையில் இருந்த பற்று முற்றிலும் போய் விட்டது. அபிமன்யுவின் குமாரனை பரீக்ஷித்துக்கு முடி சூட்டி விட்டு ஐவரும் திரௌபதியுடன் நகரத்தை விட்டுப் புறப்பட்டு யாத்திரை சென்றார்கள்.

* * *

பல இடங்களைச் சுற்றி விட்டு முடிவில் இமயமலையை அடைந்தார்கள். அப்போது அவர்களுடன் ஒரு நாயும் சேர்ந்து சென்று கொண்டிருந்தது. மலை ஏறிச் செல்லும் போது ஒருவர் பின் ஒருவராக திரௌபதியும் தம்பிகளும் விழுந்து உயிர் நீத்து உடல் பாரத்தினின்று விடுபட்டு மறைந்து போனார்கள். யுதிஷ்டிரனுக்குத் துணையாக நாய் மட்டும் சென்றது. மனிதனுக்குத் துணை தருமம் ஒன்றே என்பதற்கு இந்தக் கதை வியாசரால் அமைக்கப்பட்டிருக்கிறது.

* * *

இந்திரன் ரதத்துடன் வந்து யுதிஷ்டிரன் முன் நின்றான்.

"உன் தம்பிகளும் திரௌபதியும் சுவர்க்கம் வந்து சேர்ந்து விட்டார்கள். நீ மட்டும் எஞ்சி நிற்கிறாய். தேகத்துடன் ரதத்தில் ஏறு. உன்னை அழைத்துப் போகவே வந்தேன்!" என்றான்.

யுதிஷ்டிரன் தேரில் ஏறப் போகும் போது நாயும் ஏறப் போயிற்று. "சுவர்க்கத்தில் நாய்க்கு இடம் ஏது?" என்று இந்திரன் நாயைத் தடுத்தான்.

யுதிஷ்டிரன் "அப்படியாயின் எனக்கும் இடமில்லை" என்று சொல்லிக் கூட வந்த நாயை விட்டுச் செல்ல மறுத்துவிட்டான்.

யுதிஷ்டிரனைச் சோதிக்கவே நாயாக வந்த தருமதேவன் தன் புத்திரனுடைய உறுதியைக் கண்டு மகிழ்ந்து மறைந்தான்.

* * *

யுதிஷ்டிரன் சுவர்க்கம் அடைந்தான். அங்கே துரியோதனனைக் கண்டான். அந்தக் கௌரவன் சூரிய தேஜஸுடன் பிரகாசித்துக் கொண்டு அழகிய ஆசனத்தில் வீற்றிருந்தான். அவனைச் சுற்றி வீரலக்ஷ்மியும் தேவர்களும் சூழ்ந்து நின்று கொண்டிருந்தார்கள். யுதிஷ்டிரன் அங்குள்ளவர்களை நோக்கி, "பேராசையுள்ளவனும் குறுகிய திருஷ்டியுள்ளவனுமான துரியோதனன் இருக்கும் இடத்தில் நான் இருந்து காலம் கழிக்க விரும்பவில்லை. எங்களைப் படாத பாடு படுத்தி இவன் செய்த காரியங்களின் பயனாக சிநேகிதர்களையும் பந்துக்களையும் கொன்றோம்; தருமத்தை அனுஷ்டித்த எங்கள் பத்தினி பாஞ்சாலி இவன் உத்தரவினால் சபை நடுவில் இழுக்கப்பட்டு அவமானப்படுத்தப்பட்டாள். இந்தத் துரியோதனனைப் பார்க்க எனக்குப் பிடிக்கவில்லை. என்னுடைய தம்பிகள் எங்கே? அவர்கள் இருக்குமிடத்துக்குச் செல்ல நான் விரும்புகிறேன்" என்று சொல்லி அங்கிருந்து திரும்பினான்.

எல்லாம் அறிந்த தேவரிஷியான நாரதர் யுதிஷ்டிரனைப் பார்த்துச் சிரித்து, "ராஜசிரேஷ்டனே! இவ்விதம் செய்யலாகாது! சுவர்க்கத்தில் விரோதம் என்பது கிடையாது. துரியோதனனைப் பற்றி இந்த வார்த்தைகளைச் சொல்ல வேண்டாம். வீரனான துரியோதனன் க்ஷத்திரிய தருமத்தின் சக்தியால் இந்தப் பதவியை அடைந்திருக்கிறான். மகனே! நடந்து போன நிகழ்ச்சிகளை மனதில் பதியவைத்துக் கொள்ளக் கூடாது. முறைப்படி துரியோதனனுடன் இங்கே இரு. இங்கே விரோதங்களுக்கு இடமில்லை. மனித தேகத்தோடு நீ வந்திருக்கிறபடியால் இவ்வாறு உனக்குத் தவறான எண்ணங்கள் உண்டாகின்றன. அவற்றை அகற்று!" என்று சொன்னார்.

இதைக் கேட்ட யுதிஷ்டிரன் "பிராமணரே! தருமத்தை அறியாதவனும், பாவியும், நல்லோர்க்குத் தீமையைச் செய்தவனும், பகையும் கோபமும் வளரச் செய்தவனும், கணக்கற்ற ஜனங்களை அழியச் செய்தவனுமான துரியோதனனுக்கு இந்த வீர சுவர்க்கம் கிடைத்-

இருக்கிறது. சூரர்களும் சீலர்களுமான என்னுடைய சகோதரர்களும் திரௌபதியும் என்ன கதி அடைந்திருக்கிறார்கள்? அவர்களையும் கர்ணனையும் இன்னும் எனக்காக உயிர் நீத்த என் நண்பர்களான ராஜாக்களையும் இங்கே காணவில்லை. நான் அவர்களைப் பார்க்க விரும்புகிறேன். விராடனையும் துருபதனையும் திருஷ்டகேதுவையும் பாஞ்சால குமாரன் சிகண்டியையும் திரௌபதியின் புத்திரர்களையும் சூரன் அபிமன்யுவையும் பார்க்க விரும்புகிறேன். அவர்கள் இங்கே என் கண்ணுக்குத் தென்படவில்லையே! என் நிமித்தம் யுத்தமாகிய பெரிய ஹோமத்தீயில் தங்கள் சரீரங்களை எரித்து மாண்ட அந்த வீரர்களை நான் இங்கே காணவில்லையே? அவர்கள் எல்லாரும் எங்கே? அவர்கள் இருக்குமிடத்தில் வசிக்க விரும்புகிறேன். என் தாய் குந்தி கர்ணனுக்கும் ஜலதர்ப்பணம் செய் என்றாள். அதை நினைக்கும்போது இப்போதும் எனக்குத் துக்கம் மேலிடுகிறது. கர்ணன் யார் என்பதை நான் அறியாமல் என்னால் சாகடிக்கப்பட்டான். அவனைப் பார்க்க விரும்புகிறேன். எனக்கு உயிரைக் காட்டிலும் பிரியனான பீமனையும் தேவராஜனுக்கு ஒப்பான அருச்சுனனையும் நகுல சகதேவர்களையும் எப்போதும் தரும நெறியில் நிற்பவளான பிரிய பாஞ்சாலியையும் பார்க்க விரும்புகிறேன். இந்த இடத்தில் இருக்க எனக்கு உண்மையில் முடியவில்லை. பக்கத்தில் பிராதாக்கள் இல்லாமல் நான் சுவர்க்கத்தில் இருப்பதில் என்ன பயன்? அவர்கள் எங்கே இருக்கிறார்களோ அதுதான் சுவர்க்கம். இது சுவர்க்கமல்ல என்பது என்னுடைய கருத்து" என்றான்.

இதைக் கேட்ட தேவர்கள், "யுதிஷ்டிரா! உனக்கு அவர்களிடம் போக விருப்பமானால், தாமதிக்க வேண்டாம். போகலாம்" என்று தேவதூதனைப் பார்த்து யுதிஷ்டிரனை அழைத்துப்போகக் கட்டளை இட்டார்கள்.

* * *

முன்னால் தேவதூதனும் பின்னால் யுதிஷ்டிரனுமாகப் போனார்கள். போகும் மார்க்கத்தில் இருள் சூழ்ந்து கொண்டது. ஓரளவு கண்ணுக்குத் தெரிந்ததெல்லாம் பயங்கரமாகவும் இருந்தது. வழியெல்லாம் மாமிசமும் உதிரமும் கலந்த சேறு. பிணங்களும் எலும்புகளும் ரோமமும் நாற்புறங்களிலும் கிடந்தன. எங்கும் புழுக்கள். சகிக்க முடியாத துர்நாற்றம் வீசிற்று. கைகளும் கால்களும் வெட்டப்பட்டு ஆங்காங்கு மனிதர்கள் விழுந்து கிடந்தார்கள். இதையெல்லாம் பார்த்து தர்மாத்மாவான யுதிஷ்டிரனுக்கு ஒன்றும் விளங்கவில்லை. பலவாறாக ஆலோசனை செய்துகொண்டே போனான்.

"இந்த மார்க்கத்தில் எவ்வளவு தூரம் போக வேண்டும்? என்னுடைய சகோதரர்கள் எங்கே இருக்கிறார்கள்?" என்று தேவதூதனைக் கேட்டான்.

"திரும்பிப் போக விரும்பினால் திரும்பிப் போகலாம்" என்றான் தூதன்.

துர்நாற்றத்தைச் சகிக்க முடியாமல் யுதிஷ்டிரன் திரும்புவதில் மனங் கொண்டான். அந்தச் சமயத்தில் நாற்புறமிருந்தும் தீன ஸ்வரங்கள் கிளம்பின.

"ஓ, தருமபுத்திரரே! போய் விட வேண்டாம். எங்களை அனுக்கிரகிக்க ஒரு முகூர்த்தமாவது நில்லும். நீர் வந்தபோது



லை மணம் நிறைந்த காற்று எங்கள்மேல் சிற்று அதனால் எங்களுக்குக் கொஞ் ச ஆறுதலும் சுகமும் உண்டாயிற்று. ந்தி குமாரரே! நாங்கள் உம்மைப் பார்த் க் கொண்டிருந்தாலே கொஞ்சம் சுகம் டைகிறோம். ஒரு முகூர்த்த காலமாவது ல்லும். நீர் இருக்கும் வேளை எங்களைப் டிக்கும் வேதனை கொஞ்சம் ஓய்கிறது" ன்று அந்தக் குரல்கள் அழுதன. இவ் று தீன வசனங்கள் நாலாபுறமும் ழுந்ததைக் கேட்ட யுதிஷ்டிரன், "ஆ! ஷ்டம்!" என்று சொல்லிக்கொண்டு ன்றான். குரல்கள் ஏதோ தெரிந்த ரல்களாகவே அவனுக்குத் தோன் ற்று. "நீங்கள் யார்? எதற்காக ங்கே இருக்கிறீர்கள்?" என்று சோகம் மேலிட்டுக் கேட்டான்.

"பிரபுவே! நான் கர்ணன்" என்றது ரு குரல். "நான் பீமசேனன்" என் து மற்றொன்று. "நான் அருச்சுனன்" ன்றது வேறொன்று "நான் திரௌ தி" என்றது ஒரு தீனமான சுவரம். நான் நகுலன்" "நாங்கள் திரௌபதி த்திரர்கள்" என்று நாற்புறங் ளிலும் சத்தம் கேட்டது. தாங்க டியாத சோகத்தால் பீடிக்கப்பட்டு திஷ்டிரன், இவர்கள் என்ன பாபகருமம் ய்தார்கள்? திருதராஷ்டிரன் புத்திர ன துரியோதனன் எந்தப் புண்ணியம் ய்து மகேந்திரனைப்போல் தேஜஸ் டன் சுவர்க்கத்தில் இருக்கிறான்? இவர் ளோ இந்தப் பொல்லா நரகத்தை டைந்திருக்கிறார்கள்! நான் தூங்கு றேனா விழித்துக் கொண்டிருக்கிறேனா? ஞ்ஞானா இழந்தேனா? இது சித்த ரமா?" என்று சொல்லிக் கடுஞ்சினங் ண்டு தேவர்களையும் தருமத்தையும் ந்தித்தான்.

தேவதூதனைப் பார்த்து, "நீ எவர்க டைய தூதனோ அவர்களிடம் செல். ன் வரமாட்டேன். என்னை அடுத் ல்லவோ என்னுடைய பிரிய சகோ ர்கள் இங்கே நரகத்தில் பீடிக்கப் ட்டுக் கிடக்கிறார்கள்? நான் இவ்விடத் திலேயே வசிப்பேன்" என்றான்.

இதைக் கேட்டவுடன் தூதன் இக் னிடம் சென்று யுதிஷ்டிரன் ான்னதைத் தெரிவித்தான்.

ஒரு முகூர்த்தகாலம் கழிந்தபின் இந்திர ம் யமதேவனும் யுதிஷ்டிரன் இருந்த த்திற்கு வந்தார்கள். அவர்கள் வந்த ம் இருள் விலகிவிட்டது. பயங்கரமான ட்சிகளும் மறைந்தன. பாவிகள் படும் தனைகளும் மறைந்தன. புண்ணிய சனையுள்ள சுகமான காற்று வீசிற்று.

தருமதேவதையாகிய யமன் தன்னுடைய புத்திரனை யுதிஷ்டிரனைப் பார்த்து, "சிறந்த மதிமானே! என்னால் நீ சோதனைக்கு உள்ளானது இது மூன்றாவது தடவை. பிராதாக்களின் நிமித்தம் நீ நரகத்திலேயே இருக்க விரும்பினாய். அரசர்களாக உலகம் பரிபாலித்தவர்கள் எல்லோரும் அவசியம் நரகம் பார்க்க வேண்டும். ஆகையால், ஒரு முகூர்த்த காலம் நீயும் இந்தப் பெரிய துக்கத்தை அனுபவித்தாய். புகழ்பெற்ற வீரன் சவ்யசாசியாவது உன் அருமைத் தம்பி பீமனாவது சத்தியவான் கர்ணனாவது யாருமே உண்மையில் நரகத்தை அடையவில்லை. திரௌபதியும் நரகத்தை அடையவில்லை. இது உன்னைச் சோதிக்கச் செய்த ஒரு மாயம் இது தேவலோகம். இதோ பார்! மூவுலகங்களிலும் செல்லும் தேவரிஷி நாரதர்! துக்கப்படாதே!" என்றார்கள்.

பிறகு யுதிஷ்டிரன் மானிட தேகத்தை விட்டுத் திவ்வியமான சரீரத்தைப் பெற்றான். மனிதப் பிறப்புக்குரிய பகையும் மனவருத்தங்களும் அற்றவனாகப் பூரண பரிசுத்தம் அடைந்தான். தேவர்களாலும் ரிஷிகளாலும் பூஜிக்கப்பட்டுக் கர்ணனும் தம்பிகளும் கோபம் தீர்ந்து தெய்வ நிலை அடைந்திருப்பதை யுதிஷ்டிரன் கண்டு சாந்தி அடைந்தான்.

**வியாசர் விருந்து முற்றிற்று.**

★

## முடிவுரை

இரண்டரை ஆண்டுகளுக்கு முன் ஆரம்பித்த இந்தத் தொண்டு இன்று முடிந்தது. நம்முடைய நாட்டின் இரண்டு பழம் பெருங் காப்பியங்களின் ஒன்றும், அற்புதங்களுக்குள் பேரற்புதமுமாகிய மகாபாரதத்தைச் சரியாகச் சொல்லக் கேட்டுத் தமிழ் மக்கள் அறிவும் அடக்கமும் ஆத்ம சக்தியும் மகிழ்ச்சி நிறைந்த முறையில் அடைய வேண்டும் என்பது என் ஆசை. இந்த நோக்கத்தை என் எழுத்து எவ்வளவு பூர்த்தி செய்ததோ அது என்னால் சொல்ல முடியாது. ஆயினும் பாசத்துடனும் பக்தியுடனும் என் சக்தி முழுதும் செலுத்தித் தமிழ் மக்களை எதிரில் வைத்துக் கொண்டு கதை சொல்லுவதுபோல் எண்ணி வாரா வாரம் எழுதி வந்தேன். அது எனக்கு அளவற்ற மன ஆறுதலும் மகிழ்ச்சியும் தந்துகொண்டு வந்தது. இன்று இந்தக் காலக்ஷேபம் முடிவடைந்தது. அனைவருக்கும் வணக்கம்.

8—5—46, **இராஜகோபாலாச்சாரி.**

# இசைத் தட்டுச் சங்கீதம்

○ ✶ ○

கொலம்பியா கம்பெனியார் வெளி விட்டிருக்கும் புதிய இசைத்தட்டுகளில், ஜி. இ. 6230-ல் சங்கீத சம்ராட் ஸ்ரீ செம்பை வைத்தியநாத பாகவதர் இரண்டு சம்ஸ்கிருதக் கிருதிகளைப் பாடியிருக்கிறார். ஒரு பக்கம் ஹம்ஸாநந்தியில் 'பாவனகுரு' மறுபக்கம் ஆரபியில் 'வாரிஜநயன' என்ற கிருதிகள் பதிவாயிருக்கின்றன. இரண்டு கிருதிகளும் ராகபாவம் பொருந்திக் கச்சித மாயிருக்கின்றன. செம்பையின் கனிப்பான சாரீரம் காதை நிரப்புகிறது. ஆரபி கிருதி அச்வ நடையை யொத்து மத்யமகால பிருகடன் அழகாயும் விறு விறுப்பாயும் இருக்கிறது. 'கமேச்வர' என்ற இடத்தில் குறி பிடத்தக்க தாளக் கட்டுடன் துரித கால தில் ஸ்வரம் பாடியிருப்பது வெகு ஜோர்.



"இருந்தாலும் உங்காத்துக்காரரைப் போல இருக்கணும். ஒரு தடவையாவது உன்னை விட்டுவிட்டு சினிமா போகிறாரா?"
"அப்படி யெல்லாம் ஒன்றுமில்லை. இப்பொழுதெல்லாம் ஒரு பொம்மனாட்டியை அழைத்துக் கொண்டு போனால்தான் லேடீஸ் டிக்கட் வாங்கலாமாம். இல்லா விட்டால் மணிக் கணக்காக 'க்யூ'வில் நிற்க வேண்டி யிருக்கிறதாம்."

இசைத்தட்டு ஜி. இ 6274-ல் ஸ்ரீ டி. ஆ மகாலிங்கம் 'நின்னுவினா நாமதேந்து' என் சவரஸகன்னடா கிருதியை வேணுகான செய்திருக்கிறார். புல்லாங்குழல் வாத்திய துக்கு 'நின்னுவினா' கிருதி மிகப் பொருத் மானது என்பது பிரசித்தம். சம்பிரதா சங்கதிகளை ஆதாரமா யமைத்து அவ றுக்கு மேலே தனிக்கற்பனைச் சங்கதிக யும் அமைக்கும் அவரது திறமை இ இசைத்தட்டில் நன்கு வெளியா யிரு கிறது. 'கனுலுகனி' என்ற அனுபல்ல யில் சங்கதிகளைக் கீழ் ஸ்தாயியில் வாசித் விட்டு காலர்தன்னி எடுத்திருக்கும் சரண தின் 3-வது பாகத்தை அதற்கேற்பட் மேல் ஸ்தாயியில் ஜமாய்த்திருக்கிறார். மே கீழ் ஸ்தாயிகளில் அடுத்தடுத்து சங்க களைக் கொடுத்திருக்கும் நாத வேலை பாடுகள் மிகவும் ரஸமாயிருக்கின்றன.

இசைத்தட்டு ஜி. இ. 6287-ல் வி. சடகோபன் பாடியுள்ள 'எந்த வே கொந்து' என்ற கிருதியைச் சக்கைப் போ போட்டிருக்கிறார். கிருதிக்கு முன் ஸரஸ்வ மனோகரி ராகத்தைக் கச்சிதமாக ஆலாபனை செய்திருக்கிறார். கனிப்பான சாரீரத்தி னையம் கொடுத்து காலாக்குப் படித் யிருப்பது கவனிக்கத்தக்கது. உருப்படியை சாஹித்யத் தெளிவுடன் உருக்கமாய்ப் பா யிருக்கிறார். 'சித்த நிர்ச்சட' என்ற இட தில் சங்கதி பிரயோகங்கள் உணர்ச்சி ததும் யிருக்கின்றன. ஸ்வரப்ரஸ்தாரமும் வி விருப்பா யிருக்கிறது.

ஜி. இ. 6275-ல் லக்ஷ்மி லோககப்ரமண யம் ஒரு பக்கம் குண்டக்கிரியாவில் 'இந்து கிருதியையும், மறுபக்கம் ஹிந்தோளத்தி 'மனசலோனி' என்ற கிருதியையும் வீ யுடன் சேர்ந்து பாடியிருக்கிறார். மதுரமா குரலில் வாய்ப்பாட்டு வீணையைவி அதிகம் கேட்கிறது. விசேஷமாக நன் யில்லா விட்டாலும் பாடியிருக்கும் இ கிருதிகள் கச்சிதமா யிருக்கின்றன.



# சமர்த்

"டொக், டொக், டொக்" என்ற சத்தம் காதைப் பிளந்தது. தம்முடைய அறையில் ஏதோ வேலையாக இருந்த அப்பா, உள்ளேயிருந்தபடியே எட்டிப் பார்த்தார். மணி சுவரில் ஆணியை அடித்து இந்தியா 'மேப்'பை மாட்டுவதற்கு முயன்று கொண்டிருந்தான்.

"இந்தப் பள்ளிக்கூடத்துக்காரர்கள் இவனுக்கு ஏன் கோடை விடுமுறை விட்டார்களோ, தெரியவில்லையே!" என்று அப்பா தமக்குள் அலுத்துக்கொண்டே "அடேய், மணி! அங்கே என்னடா சத்தம்?" என்று உறுமினார்.

அவருடைய உறுமலிலிருந்து, அப்பா கோபமாயிருக்கிறார் என்பதைத் தெரிந்து கொண்டு விட்டான் மணி. ஆனாலும் ஆசை அவனை விடவில்லை. எப்படியாவது அப்பாவைச் சமாதானப்படுத்தி, சுவரில் அந்த இந்தியா 'மேப்'பை மாட்டிவிட வேண்டுமென்று அவன் தீர்மானித்தான்.

இந்தத் தீர்மானத்தைக் காரியத்தில் நிறைவேற்றுவது எப்படி?

அதற்கும் ஒரு யோசனை தோன்றிவிட்டது அவனுக்கு. உடனே இந்தியா 'மேப்'பைக் கையில் எடுத்துக் கொண்டு அப்பாவின் அறைக்குள் பிரவேசித்தான்.

அவனைக் கண்டதும், "என்னடா?" என்று கேட்டார் அப்பா எரிச்சலுடன்.

"ஒன்றுமில்லை, அப்பா! இதுதானே இந்த மகா சமுத்திரம்?" என்று வெகு வினயமாக அவரைக்கேட்டு வைத்தான் மணி.

"ஆமாம்!" என்று அலுப்புடன் இரைந்து ஆமோதித்து விட்டு, மீண்டும் தம்முடைய வேலையில் ஆழ்ந்து விட்டார் அப்பா.

மணியின் முகத்தில் அசடு வழிந்தது. ஆனாலும் அவன் அதைப் பொருட்படுத்தாமல், "அப்பா, அப்பா! இது அரபிக் கடல்தானே?" என்று மீண்டும் கேட்டான்.

எப்படியாவது தன்னுடைய பூகோள ஞானத்தை அவிழ்த்து விட்டால் அப்பாவின் கோபம் தணிந்துவிடும் என்பது அவனுடைய நம்பிக்கை.

ஆனால், அடுத்த நிமிஷமே அவனுடைய நம்பிக்கையைச் சிதற அடித்துவிட்டார் அப்பா. அவர், அவன் கையிலிருந்த இந்தியா மேப்பை வெகு ஆத்திரத்துடன்





# ணி




ாங்கித் துண்டுத் துண்டாகக் கிழித்தார். அவற்றை ீண்டும் அவனிடமே கொடுத்து, "இந்தா, முதலில் இதைக் கொண்டு போய் இந்து மகா சமுத்திரத்தில் பாட்டு விட்டு வா; அப்புறம் நான் அரபிக் கடல் து என்று உனக்குச் சொல்கிறேன்!" என்றார்.

மணி பொத்துக் கொண்டு வந்த அழுகையை ஒரு ாறு அடக்கிக் கொண்டு, அந்த இந்தியா மேப்பின் துண்டு ளை எடுத்துக் கொண்டு வெளியே வந்தான்.

பழையபடி அந்த இந்தியா மேப்பைச் சேர்த்து வைக்க அவன் பட்ட பாடு கொஞ்ச நஞ்ச மல்ல. என்னதான் சேர்த்துப் பார்த்தும் சரியாகவே அமையவில்லை. கடைசி யில், எல்லாவற்றையும் கலைத்து விட்டு, கண்ணை மூடிக் காண்டு அந்தத் துண்டுகளிலிருந்து இரண்டை எடுத்துச் சேர்த்து வைத்துப் பார்த்தான். என்ன ஆச்சரியம்! யானை ின் துதிக்கை போல ஒன்று வந்தது; இன்னும் இரண்டு ண்டை எடுத்துச் சேர்த்து வைத்தான்; யானையின் தலை!

மணிக்குச் சொல்ல முடியாத சந்தோஷம்! 'பட பட' வென்று யானையின் கால், வால் எல்லாவற்றையும் எடுத் துச் சேர்த்து வைத்து விட்டான். சிறிது நேரத்திற்கெல்லாம் முழுக்க முழுக்க ஒரு யானையே அவனுக்கு முன்னால் வந்து ின்றுவிட்டது!

இந்தச் சமயத்தில், மணியின் அப்பாவும் தம்முடைய வலையை முடித்துக் கொண்டு, அறையை விட்டு வெளியே ந்தார். அவரைக் கண்டதும், "அப்பா, அப்பா! யானை ார்த்தாயா, யானை!" என்றான் மணி.

"என்னடா, இது! இது எப்படி வந்தது?" என்று கட்டார் அப்பா.

மணி விஷமத்துடன் கண்ணைச் சிமிட்டிக் கொண்டே, அந்த யானைப் படத்தை அப்படியே திருப்பி, அதனுடைய ின் பக்கத்தை அப்பாவுக்குக் காண்பித்தான். அந்தப் க்கத்தில் என்ன இருந்தது, தெரியுமா? — இந்தியா மேப்!

"எப்படி?" என்றுதானே கேட்கிறீர்கள்? ஏற்கனவே அந்த இந்தியா மேப்பிற்குப் பின்னால் யானைப் படம் ஒன்று இருந்தது. ஆகவே, மணி யானையைச் சேர்த்து வைக்கவும், ின் பக்கம் இருந்த இந்தியா மேப்பும் தானாகவே சர்ந்து கொண்டது!










# பழியும்... ...பாவமும்

“அம்மா, அம்மா!” என்று நிமிஷத்திற்கு ஒரு தடவை ரகு எதற்கெடுத்தாலும் குழந்தை மாதிரி என்னைக் கூப்பிட்டுக் கொண்டிருந்தான். “அம்மா! இந்தச் சட்டையே போட்டுக்கொண்டு இருக்கட்டுமா?” “அம்மா! இத்தனை காப்பியையும் நான் குடிக்கலாமா?” “அம்மா! அதோ அந்த மாமா என்னை அவர் வீட்டுக்குக் கூப்பிடுகிறார்; போய் வரட்டுமா?” என்று இம்மாதிரி சர்வ சாதாரண விஷயங்களுக்குக் கூட என்னை அவன் கேட்டுக் கொண்டிருந்தது எல்லோருக்கும் ஆச்சரியமாகத்தான் இருந்தது.

ரகு சின்னக் குழந்தையா, என்ன? விடிந்தால் ஒரு பெண்ணின் பாதத்தைத் தூக்கி அம்மியின் மீது வைத்து அக்னி வலம் வந்து அவளை வாழ்க்கைத் துணைவியாக ஏற்றுக் கொள்ளப் போகிறான்! இவ்வளவு வயதாகியும் கூட என் காலையே சுற்றிச் சுற்றி வட்டமிடும் ரகுவைக் கண்டு எனக்கு உள்ளூறக் கர்வமாகத்தான் இருந்தது. பிறத்தியார் பொறாமையுடன் அவனைப் பார்த்து, ‘அம்மாவின் பிள்ளை’ என்று இளக்காரமாகச் சொன்னால் எனக்கென்ன, உடம்பில் காய்த்தா தொங்குகிறது?

உண்மையில் ரகு திரேதா யுகத்து அயோத்தி ரகுநந்தனன்தான்; என் வார்த்தைக்கு இரண்டு சொல்லும் வழக்கமே அவனிடம் கிடையாது. கனகத்தின் தாயார் அவனுக்குத் தன் பெண்ணைக் கொடுக்க வேண்டும் என்று வந்தபோது அவன் கொ[...] சத்தில் பெண்ணைப் பார்க்கப் புறப்படவில்லை[...] அவனுடைய அப்பாவும் நானுமாக மிகவு[ம்] வற்புறுத்தினதின் பேரில்தான் ‘அவ’ருடன் போய்ப் பெண்ணைப் பார்த்துவிட்டு வந்தான். நான் கனகத்தைக் கலியாணத்திற்கு முன் பார்க்காவிட்டாலும் பார்த்தவர்கள் சொ[ல்]லியதிலிருந்து அவள் நல்ல அழகியாகத்தான் இருப்பாள் என்று நினைத்தேன். ரகுவு[ம்] நான் கேட்டபோது மிகுந்த [illegible] பதிலே சொல்லாமல் சிரித்த விஷமச் சிரிப்[பி]லிருந்து அவனுக்குக் கனகத்தைப் பிடி[த்]திருக்கிறது என்று தெரிந்து கொண்டேன். சீரும் வரிசைகளும் நான் சொன்னபடி செய்வதாகச் சம்பந்தி அம்மாள் ஒப்பு[க்] கொண்டாள். ஏதோ கடவுள் கிருபையால் கல்யாணமும் குதிர்ந்தது.

ஜானவாஸம் புறப்பட்டாயிற்று; பெரி[ய] ‘செடான்’ கார்; இரட்டை ஜதை மேளம் அந்தச் சமயத்தில் பொறுக்கி எடுத்தா[ற்] போல் மோகன ராகத்தில் ‘நனு பாலிம்ப’ என்கிற கீர்த்தனையை அமர்க்களமா[க] வாசிக்கிறார்கள். ‘கார்’க்கு முன்னா[ல்] புருஷர்கள் மேளக் கச்சேரியைச் சுற்[றி] நின்று கொண்டிருந்தனர். பின்னா[ல்] எங்கள் கூட்டம்; தெருவின் இரண்டு பக்க[ங்]களிலும் ஆண், பெண் க்கலாக முகத்தி[ல்] புன்னகை ததும்பப் பார்த்துக்கொண்டே நின்றார்கள். ஓரிருவர் என்னைச் சுட்டிக் காட்டி, “பிள்ளையாண்டானின் தாயார்!” என்று கண்களால் பேசிக்கொண்டார்கள்

குழந்தைகள் அந்தக் கூட்டத்தைச் சுற்றிச் சுற்றி விளக்கை வட்டமிடும் விட்டிலைப் போல் ஓடியாடி விளையாடிக் கொண்டிருந்தார்கள்.

எல்லாம் ஆனந்தமாகத்தா னிருந்தது. ஆனாலும் ஏனோ அந்தக் கசப்பு மட்டும் என் மனதை விட்டு மாறவில்லை. எத்தனையோ வருஷங்கள் ஓடிவிட்டன! எவ்வளவோ காரியங்கள் மேலும் மேலும் தொடர்ந்து நடந்து விட்டன! பாழும் மனதிலிருந்து அந்தக் கறையைத் துடைக்கத்தான் வழியே தெரியவில்லை!

2

இருபது வருஷங்களுக்கு முன்னால் நடந்த விஷயம். இப்பொழுது என் தாயார் சுப காரியங்களுக்கு வர முடியாத விதவை. அப்பொழுது என் தகப்பனார் இருந்தார்; என் அம்மா கர்நாடகத்திலும் கர்நாடகமான சுமங்கலி; முகத்தில் பச்சை மஞ்சள் பூச்சு; நெற்றிக் குங்குமம்; முழங்கை வரைக்கும் பட்டு ரவிக்கை; உடம்பு முழுவதும் வாலாயமாகப் போர்த்தி உடுத்திக் கொண்ட பதினெட்டு முழப் புடவை. இதையெல்லாம் ஞாபகத்திற்குக் கொண்டு வருவதென்றால் மனதில் கிலேசம் தான் உண்டாகிறது.

அப்பொழுது நான்தான் வீட்டில் தலைச்சன் பெண். எனக்குப் பத்து வயதிலிருந்து கலியாணப் பேச்சு ஆரம்பமாகிப் பன்னிரண்டாவது வயதில் கலியாணம் திகைந்தது. இப்பொழுது போலா அப்பொழுது? கலியாணப் பிள்ளை என்னைப் பார்க்கவே வரவில்லை. பையனின் பெற்றோர் வந்து பார்த்தார்கள். பையனின் தகப்பனார் என்னைப் பார்த்துவிட்டுத் தம்முடைய சம்மதத்தைத் தெரிவித்தார். மேற்கொண்டு சீர் வரிசைகள் பேசி முகூர்த்தத்திற்கும் தேதி குறிப்பிட்டு விட்டார்கள்.

என் தகப்பனாரும் போய்ப் பையனைப் பார்த்துவிட்டு வந்தார். ‘மாப்பிள்ளை கொஞ்சம் மாநிறம்; மூக்கும் முழியுமாக நன்றாகத்தான் இருக்கிறான்; ஏதோ அன்ன வஸ்திரத்திற்குக் குறைவில்லை. பையன் படிக்கிறான்; நாளைக்கு இரண்டு காசு சம்பாதிக்காமல் போய் விடுவானா?” என்ற மனத் திருப்தியுடன் அவர் திரும்பி வந்தார்.

கலியாணத்திற்கு முந்தின நாள் நிச்சய தார்த்தம்; மாப்பிள்ளை அழைப்பு எங்கள் ஊர் சிவன் கோவிலிலிருந்து புறப்படுவது வழக்கம். ‘முதலியார் ஆத்தி’லிருந்து என் தகப்பனார் இரட்டைக் குதிரை சாரட்டை ஜானவாசத்திற்காகக் கொண்டு வந்திருந்தார். மலைக்கோட்டை கண்ணுச்சாமி மேளம்; எல்லாவற்றையும் பெரும் போக்குடனும், புராதனப் பத்ததியுடனும் நடத்த என் தகப்பனார் திட்டம் போட்டிருந்தார்.

மாப்பிள்ளை அழைப்பு தெருக்கோடிக்கு வந்து விட்டது. வீட்டில் நான் மட்டும் இருந்தேன். என் தாயைப் பெற்ற பாட்டி மட்டும் என்பக்கத்தில் உட்கார்ந்துகொண்டு, கலியாணத்தில் எப்படி எப்படியெல்லாம் நடந்து கொள்ள வேண்டும் என்பதைப் பற்றிச் சொல்லிக் கொண்டிருந்தாள். அப்பொழுது என் மனம் அடித்துக் கொண்ட படபடப்பைச் சொல்லத் தரமன்று. எப்படியும் அன்றைக்குள் ‘பிள்ளையாண்டானை’ ஒரு தடவை பார்த்து விடவேண்டும் என்ற என் கன்னி ஆவலில் முகம் அடிக்கு ஒரு தடவை ‘குப், குப்’ பென்று வியர்த்துக் கொட்டிக் கொண்டிருந்தது. இதனால் நெற்றிக்கு இட்டுக் கொண்டிருந்த குங்குமம் கரைந்து வழிந்த வண்ணமாக இருந்தது.





மொட்டை மாடியிலிருந்து பார்த்துக் கொண்டே இருந்தேன், உள்ளமும் உடலும் நடு நடுங்க. அதோ பக்கத்து வீட்டுக்கு வந்துவிட்டது சாரட்டு. எனக்கு மாலையிடப் போகிறவரைப் பார்த்தேன். இப்போது சொல்ல எனக்கென்ன வெட்கம்? ‘அவர்’ கறுப்பாக இல்லாவிட்டாலும் அழகாயிருந்தார். இரட்டை நாடி சரீரம்; தலை நிறைய உரிக்காத தேங்காய் அளவு இருந்த குடுமி ஒன்றுதான் அந்த முகத்திற்கே அழகைக் கொடுத்தது. உண்மையைச் சொல்கிறேன்: என் தோழிகள்—சில விஷமப் பிசாசுகள்—"கறுப்பு மாப்பிள்ளைக்கு வாக்குப் பட்டாயே!' என்று என்னைப் பழித்தாலும்கூட, எனக்கு அவர் மீது வெறுப்பு ஒன்றுமில்லை. தெய்வமே எனக்காக—என் கை பிடிக்க — அவரைப் பிறப்பித்திருக்கிறார் என்ற முழு நம்பிக்கையுடன் நான் அவரை மணமாக ஏற்கச் சித்தமானேன்.

கல்யாணக் கூடம் நிறையப் பந்து மித்திரர்கள்; ஆண் பெண் குழந்தைகள் அடங்கலும் உட்கார்ந்து கொண்டிருந்தார்கள். கால்கள் பதட்டத்தினால் தடுமாற என்னை என் தாயார் அழைத்து வந்து மணையில் உட்கார வைத்தாள்.

குனிந்த தலை நிமிராமல் உட்கார்ந்திருந்த என் காதில் ஒன்றுமே விழவில்லை. என்னையறியாமல் என் உள்ளத்தில் ஒரு இன்பம் மண்டி என் அறிவில் எதையுமே உணர்த்தவில்லை. ஆரத்தி எடுத்ததும் எடுக்காததுமாக வேகமாக உள்ளே ஓடிவிட்டேன்.

அரைமணி நேரம் கழித்துச் சாப்பிட இலை போடப்பட்டது. ஏதோ ‘குசு குசு’ வென்று கும்பல் கும்பலாகப் பேச ஆரம்பித்துக் கடைசியில் முடிவாக, "மாப்பிள்ளைக்குப் பெண்ணைப் பிடிக்கவில்லையாம்; அவன் கலியாணம் செய்து கொள்ள மறுக்கிறான்!" என்ற விபரீதமான செய்தி என் காதில் விழுந்தது. ஏதோ வெண்ணெய் திரண்டு வரும்பொழுது தாழி உடைந்த கதை என்பார்களே, அதெல்லாம் இதற்குச் சரியான உபமானமாகாது, என் உள்ளத்தில் அப்போது ஏற்பட்ட நடுக்கத்தை வர்ணிப்பதற்கு.

அன்று என் தகப்பனார் பைத்தியம் பிடித்தவர் போல் அங்கு மிங்கும் ஓடினது என் மனக் கண்முன் இன்னும் நிற்கிறது. அதை இப்பொழுது நினைத்துக் கொண்டாலும் பெற்றவர்களுக்குச் சொல்லொணாத் துன்பத்தைக் கொடுக்க வேண்டியிருக்கும். பெண் ஜன்மத்தையே பூலோகத்தில் படைக்க வேண்டாம் என்று கடவுளிடம் முறையிடத்தான் தோன்றுகிறது.

மனது எப்பொழுதும் கெட்டதைத் தானே முதலில் நினைக்கிறது! "கலியா

ணம் இப்படியே நின்று விட்டால்......!" என்று நினைத்த பொழுது என்னைப் பூமி விழுங்கி விடக் கூடாதா என்று நினைத்துக் குமுறினேன். நிச்சயதார்த்தம் செய்த பிறகு வேண்டாம் என்றால்!......ஜவுளிக் கடையில் கூடத் துணியைக் கிழிக்கச் சொல்லி விட்டுப் பிறகு வேண்டா மென்றால் திரும்ப வாங்கிக் கொள்ள மாட்டாரே! என் நிலைமை என்ன ஆவது? எத்தனை கஷ்டம்? ஏதோ கடவுள் மேல் பாரத்தைப் போட்டுவிட்டு, தெய்வம் அந்தப் பிள்ளையாண்டான் மனதை மாற்றக் கூடாதா என்று பிரார்த்தித்துக்கொண்டே காத்திருந்தோம். ஒரு மணி நேரம் கழித்து என் தகப்பனார் கண் கலங்க, "உம்...... என் சொல்வது வேளை! அவன் ஒப்புக் கொள்ள மாட்டேன் என்கிறான். அதற்கு மேல் பலவந்தப்படுத்திக் கல்யாணம் செய்து வைத்தால், 'ஆற்றில் விழுந்து விடுவேன்!' என்று பயமுறுத்துகிறான். அந்தப் பாவம் வேறு வேண்டுமா? கல்யாணத்தை நிறுத்திக் கொள்ளலாம் என்று சொல்லி விட்டேன்!" என்றார்.

என் தாயார், "சம்பந்திப் பிராமணர் அவனுக்குக் கொஞ்சம் நல்ல வார்த்தை சொல்லக் கூடாதோ?" என்று பரிதாபமாக அழுதாள்.

"அசடே! அவர்தான் தவியாய்த் தவிக்கிறார்; அந்தக் குரங்கு கேட்டால்தானே? அந்த மட்டுக்கு, நம்ம பெண் அவனிடத்தில் போய் இன்னும் கஷ்டப்படாமல் போனதே அதிர்ஷ்டம் என்று நினைத்துக் கொள்!" என்று சொல்லிக் கொண்டே அவர் கீழே உட்கார்ந்து விட்டார்.

எல்லாரும் என்னைப் பார்த்துப் பரிதபிக்கக் கல்யாணம் இப்படி அலங்கோலமாக நின்று விட்டது அந்த நேரத்தில் உலகமே பாழடைந்து விட்டது போல எனக்குத் தோன்றிற்று. கல்யாணம் நிச்சயமான நாள் முதல் என் உள்ளத்தில் இருட்டிக்கணமாகப் பொங்கிக் கொண்டிருந்த ஆனந்தம் ஓர் விஷமாக மாறி என் உடலைத் தகித்தது.

கல்யாணம் நின்று விட்டால் பொழுது விடியாதா என்ன? அதற்குப் பிறகு வரன்கள் வந்து என்னைப் பார்ப்பதும், இந்த அலங்கோலக் கதையை வாயுள்ள புண்ணியாத்மாக்களின் மூலம் கேட்பதும், பிறகு என்னை மணக்க முற்படாததும் அடுத்த இரண்டு வருஷங்களில் நடந்த வழக்கமான காரியங்களாகும்.

பிறகு, ரகுவின் அப்பா என்னை வந்து ஏற்றுக் கொண்டார். என் பெற்றோர்களுடைய பொறுமைக்கும், அருமைக்கும் ஆளாகாமல் எப்படியாவது என் கழுத்தில் தாலி ஏறினால் போதும் என்ற கவலையுடன் ஆடம்பரமில்லாமல் என் கல்யாணத்தை ஒரே நாளில் முடித்து வைத்தனர். நான் முதலில் நினைத்துக் கண்ணீர் விட்டபடி என் அதிர்ஷ்டம் அப்படிச் சோடையாகப் போய்விடவில்லை. கடைசியில், நல்ல கணவனையே அடையப் பெற்றேன்.

3

இன்றைய தினம் ரகு மாப்பிள்ளைக் கோலத்தில் ஜானவாசத்திற்குப் புறப்படும் பொழுது இந்த எண்ணம் ஏன் வந்ததோ தெரியவில்லை. அதற்குள் ஜானவாசமும் பெண் வீட்டுக்கு வந்து விட்டது. 'டும்டும்' என்ற மேளச் சத்தத்துடன் ரகு வலது பாதத்தை முதல் படியில் எடுத்து வைத்து ஏறி உள்ளே போனான்.

ரகுவிற்குப் பக்கத்தில் அவர் உட்கார்ந்தார். அவருக்குப் பின்னால் நான் நின்று கொண்டிருந்தேன். சாஸ்திரிகள் மந்திரம்

## எலிமெண்டரி பாடசாலையில்



ஜன்னல் ஓரமாக உட்கார்ந்து கொண்டிருக்கும் பையனுடைய வேலை!



"ஸார்! நானும் எவ்வளவோ பத்திரிகைகள் படித்திருக்கிறேன். இருந்தாலும், உங்கள் பத்திரிகையைப் படித்தவுடன் நாமும் ஏன் கதை எழுதக்கூடாது என்று தோன்றியது!"

---

சொல்லிக்கொண்டிருந்தார். மணப் பெண்ணின் பக்கம் திரும்பினேன். என் கண்களையே நம்ப முடியவில்லை! கனகத்தின் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டிருந்த அவள் தகப்பனார்தான் என்னை மணக்க இருபது வருஷங்களுக்கு முன்னால் நிச்சயதார்த்தம் செய்துகொண்டு, கடைசியில் திரஸ்காரம் செய்த புருஷோத்தமன்! மற்றொரு தடவையும் நான் அவரை உற்றுப் பார்த்தேன். சந்தேகமில்லை! உடனே மெதுவாக ரகுவின் காதண்டை போய் அவருடைய பெயரை ரகசியமாகக் கேட்டேன். ராதாகிருஷ்ணய்யர் என்று சொன்னதும் எனக்கு ஒரு உத்வேகம் கிளம்பிவிட்டது. சாம்பலில் மறைந்து கிடக்கும் நெருப்புப் பொறி போல என் உள்ளத்தில் ஊறிக் கிடந்த பழி வாங்கும் உணர்ச்சி மேலோங்கி விட்டது.

ரகுவிடம் ஒரு வார்த்தை சொல்ல வேண்டியதுதான்; உடனே கலியாணம் நின்றுவிடும். அது பாபகாரியம்தான். ஆனால் பரம்பரையாக மிகவும் மரியாதையாகவும், கௌரவமாகவும் வாழ்ந்து வந்த என் குடும்பத்தை ஒரே நிமிஷத்தில் பிறர் கண் சிரிக்கும்படி செய்த அவரைப் பழி வாங் இதைவிட வேறு சந்தர்ப்பம் வாய்க்குமா?

இவ்வாறு அறிவும் ஆங்காரமும் போரா டக் கடைசியில் ரகுவிடம் சொல்லி கல்யாணத்தை நிறுத்தச் செய்து என் பழியைத் தீர்த்துக் கொண்டு விடுவது என்றே முடிவு செய்து விட்டேன்.

அடுத்த நிமிஷம் ஞானவாசக் கோலத் துடன் முகத்தில் வினயம் ததும்ப "அம்மா! என்ன சமாசாரம்? வாய் விட்டு சொல்லேன்" என்று ரகு என் காலை பிடித்துக் கொண்டான்.

என் கண்கள் கலங்கின. பாழும் தைரிய மட்டும் வரவில்லை! "கலியாணத்தை நிறுத்திவிடு!" என்று எப்படி வாய் விட்டு சொல்வது?

"சொல்லேன், அம்மா! சம்பந்திகள் ஏதாவது சொன்னார்களா? அந்த பெண்ணை உனக்குப் பிடிக்க வில்லையா இப்பொழுதும் மிஞ்சிப் போய் விடவில்லை நீ இஷ்டப்பட்டால் இப்படியே கிளம்பிவி டுகிறேன்!" என்றான் ரகு பதட்டத்துடன்.

"ஆமாம்; எழுந்து வந்துவிடு...!" என் வாய்க்குள் முணுமுணுத்துக் கொண்டே தவிர, அவன் காதில் அது விழ இடமில்ல மல் விம்மினேன்.

"அம்மா! இதோ பார்; வாய்விட்டு சொல்ல என்ன பயம்?" என்று ம றாடினான் ரகு.

"கண்ணே, ரகு! இது வரையிலு நான் ஒருத்திதான் உனக்கு எல்லாவற்றி கும் வர வேண்டியிருந்தது. என்னுடை அன்பிலேயே இதுவரை நீ மூழ்கியிருந்தாய் என் ஆணையின் கீழேயே இத்தனை வ ஷங்கள் வளர்ந்து விட்டாய்! இன் இன்னொருத்தி வந்து என்னுடைய அன் லிருந்து உன்னைப் பிடுங்கிக் கொள்ள போகிறாளே என்று நினைக்கும் பொழு என் மனம்...?—கிடக்கட்டும்; எழுந்திரு ரகு! போய் மணையில் உட்கார்! நானு இதோ வந்து விட்டேன்" என்று என் கண்களைத் துடைத்துக் கொண்டு எழுந் பந்தலுக்குப் போனேன்.

# வேறெந்த டயரிலும் இல்லாத ஒரு கூடுதலான அனுகூலம்




## கம் டிப்பிடு

இன்று உயர்ந்தது -
நாளை இன்னும் சிறந்தது

நீங்கள் - பயர்ஸ்டோன் கம் - டிப்பிடு டயர்களை வாங்குவதால் அதிக மைல்கள், அதிக பந்தோபஸ்து — ஆகிய இக்கூடுதலான அனுகூலங்களை அடைகிறீர்கள். நவீன மோட்டார் ஓட்டுவதில் டயர்களுக்கு ஏற்படக்கூடிய தேய்வு, அழிவுகளுக்கு ஈடு கொடுக்குமாறு ரப்பரையும் பஞ்சு இழைகளையும் நன்றாகப் பிரியா வண்ணம் இணைத்து ஒட்டவைக்கும் தனிப்பட்ட பேடண்ட் கம்-டிப்பிங் முறை இது ஒன்றில்தான் கையாளப்படுகிறது.

பயர்ஸ்டோன் டயர் & ரப்பர் கம்பெனி ஆப் இந்தியா லிமிடெட்.

பம்பாய் ★ மதராஸ் ★ கல்கத்தா ★ பெங்களூர் ★ நாகப்பூர்
லாகூர் ★ டெல்லி ★ கராச்சி ★ கோஹாட்டி ★ லக்னோ

# Firestone

## பயர்ஸ்டோன்

டயர்களில் கம்-டிப்பிடு இது ஒன்றுதான்

F. 10-46


501
501
501



# படித்துப் பார்!

## கல்வியும் பதிலும்

[ஆசிரியர் : ஸ்ரீ. பெ. தூரன் கூடசுந்தரம் பிள்ளை ; பிரசுரம் : தமிழ்ப்பண்ணை ; தியாகராய நகர், சென்னை ; விலை : ரூ. 2.]

அப்பாவுக்குத் தெரியாத விஷயங்கள் உலகத்தில் ஆயிரக்கணக்கில் இருக்கின்றன. அது தெரியாத சின்னஞ்சிறு குழந்தைகள் தங்கள் அப்பாவிடம் 'அப்பா! முட்டைக்குள் எப்படிக் கோழி வருகிறதப்படி? சோடா பாட்டிலுக்குள் குண்டு அடைப்பது எப்படி!'' என்று அப்பாவிடமாகக் கேள்விகளைக் கேட்டுப் பிராணனை வாங்குகின்றனர்.



அம்மாதிரி சமயங்களில் அப்பா என்ன சொல்கிறார்?

''போடா பயலே! இதெல்லாம் உனக்கென்ன கேள்வி? இனிமே மறுபடியும் வந்தாயோ உன்னை உதைப்பேன்'' என்று விரட்டியடிக்கிறார். நல்லவேளையாக, இந்தக் குழந்தைகளுக்கெல்லாம் பதில் சொல்லக் கூடிய அப்பா ஒருவர் இருக்கிறார். அவர்தான் ஸ்ரீ. பொ. திரிகூட சுந்தரம் பிள்ளை அவர்கள்.

1916-ம் வருஷம் சட்டப் பரீக்ஷை பாஸ் பண்ணி 1921-ல் மகாத்மாவின் ஒத்துழையாமை இயக்கத்தில் சேர்ந்ததிலிருந்து இன்று வரை தேசத் தொண்டு செய்து வருபவரும், காந்தியடிகளின் தத்துவங்களை நன்குணர்ந்து பிரசாரம் செய்து வருபவருமான ஸ்ரீ திரிகூட சுந்தரம் பிள்ளை அவர்கள் குழந்தைகளுக்காக ''கேள்வியும் பதிலும்'' என்ற ஒரு அருமையான புஸ்தகத்தை எழுதியிருக்கிறார்.

புஸ்தகம் முழுவதும் கேள்விகளும் பதில்களுமாகவே இருக்கின்றன. ஒரு குழந்தை கேள்வி கேட்டுக் கொண்டே போகிறது. அதற்கு அந்தக் குழந்தையினுடைய அப்பா சின்னக்கை கொடுத்து விஷயத்தை நன்குச் சொல்லி விளங்க வைக்கிறார்.

''அப்பா! வானம் நீலமாயிருக்கிறதே. அதற்குக் காரணம் என்ன?''

''அப்பா! வானத்தை எது தாங்கிக் கொண்டிருக்கிறது?''

''அப்பா! பாறைகள் வளருமா?''

என்று குழந்தைகள் நம்மை சர்வ சாமான்யமாகக் கேட்கும் கேள்விகளையெல்லாம் தொகுத்துச் சுமார் 268 கேள்விகளும் அவற்றுக்குப் பதிலும் சொல்லியிருக்கிறார்.

விஞ்ஞான முறையில் காரண காரியங்களை அறியக் குழந்தைகள், பெரியவர்கள் யாவரும் எளிதில் புரிந்து கொள்ளும்படி தெளிவான முறையில் அழகாக எழுதியிருக்கிறார்.

ஒரு குழந்தை கேட்கும் கேள்வியைப் பாருங்கள்! ''அப்பா, தந்தித் தூண்களில் காது வைத்துக் கேட்டால் இரைவது போல் கேட்கிறதே. அதுதான் தந்தி பேசுவதோ?''

அப்பாவின் பதில் : ''தம்பி! தந்திக் கம்பியில் பேசுவதில்லை. அதில் மின்சார சக்திதான் அனுப்புவார்கள். தந்திக் கம்பியில் காற்றுப் பட்டுத் துடிக்கிறது. அதோடு சேர்ந்து தூணும் துடிக்கிறது. அது காரணமாகத்தான் தூணில் காது வைத்தால் இரைச்சல் கேட்கிறது.''

இந்த அழகிய புஸ்தகத்தின் முகவுரையில் ''ஸ்ரீ பிள்ளை அவர்கள் குழந்தைகளின் அறிவு வளர்ச்சிக்காகவே இப்புஸ்தகத்தை எழுதியுள்ளார்'' என்று ஸ்ரீ சின்ன அண்ணாமலை எழுதியிருக்கிறார். இதை நாம் ஒப்புக் கொள்ளவில்லை.

புஸ்தகத்தைப் படித்தால் குழந்தைகள் என்ன, பெரியவர்களின் அறிவும் கூட ரொம்பவும் வளர்ச்சியடையும் என்பதில் சந்தேகமில்லை.

'கேள்வியும் பதிலும்' என்ற புஸ்தகத்தைப் படிப்பவர்கள் இரண்டு விதத்தில் அதிர்ஷ்டசாலிகள்.

1. படிக்கும் நேயர்களே மறுபடியும் குழந்தைப் பருவத்தைப் பெறுகிறீர்கள்.

2. முரட்டுத்தனமாக நடந்து கொள்ளும் அப்பாவாக இல்லாமல், அன்புடனும் பொறுமையுடனும் பதில் அளிக்கும் ஒரு அப்பாவையும் பெறுகிறீர்கள்.

இவ்வளவு உபயோகமான, ஒவ்வொரு குடும்பத்துக்கும் இன்றியமையாத ஒரு அழகிய புஸ்தகத்தை வெளியிட்ட தமிழ்ப் பண்ணையாளர்களுக்கும் புத்தகத்தின் ஆசிரியர் ஸ்ரீ பொ. திரிகூட சுந்தரம் பிள்ளை அவர்களுக்கும் தமிழ்நாட்டின் சார்பாக நாம் நமது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்!

---

## கவலை வேண்டாம்!



தையற்காரன் :—இன்னும் என்ன யோசிக்கிறீங்க? தண்ணியிலே ஒரு தரைப்பு நனைந்தால் சுருங்கிடுங்க. நீங்க கவலைப்படாமல் போங்க.



# ஜோடி மைனா

சுந்தா

ஒரே ஒரு ஊரின் ஒரு பூங்காவனம். அந்தப் பூங்காவனத்தில் ஒரு சரக்கொன்றை மரம். அந்த மரத்தின் கிளையொன்றில் ஒரு ஜோடி மைனுக்கள். அதே மரத்தின் அடியில் ஒரு ஆசனம். அந்த ஆசனத்தில் ஒரு ஜோடிக் காதலர்கள்.

காதலன் :—உனக்குத்தான் எவ்வளவு பொருத்தமான பெயர்! நீ ரூபத்திலும் சுந்தரி; குணத்திலும் சுந்தரி! உன் மூலம் என் வாழ்க்கையே சுந்தர மயமாயிருக்கிறது.

காதலி :—உங்களைப் போல் எனக்கு அலங்காரமாய்ப் பேசத் தெரியாது. உங்களை அடைந்தது என் பாக்கியம். அவ்வளவுதான் எனக்குச் சொல்லத் தெரியும்.

காதலன் :—இந்த ஒரே வாக்கியத்தில் அத்தனையும் சொல்லி விட்டாயே! சொன்ன இதழ்களுக்கு இந்தா, பரிசு!

• • •

பெண் மைனு :—பேஷ்! மனிதக் காதலர்களும் நம்மைப் போலவேதான் உல்லாசமாய்க் கொஞ்சிக் கொண்டிருக்கிறார்கள்!



ஆண் மைனு :—ஒரு ஜோடியைப் பார்த்து விட்டு ஒன்றையும் மதிப்பிடக் கூடாது. இந்தப் பூஞ்சோலைக்கு வருகிறவர்களில் அநேகர் கலியாணம் ஆகாதவர்கள்; அல்லது கொஞ்ச நாட்களுக்கு முன்னால் கலியாணம் செய்து கொண்டவர்கள். மனிதர்களின் இல்வாழ்க்கை இயல்புகளை அறிய வேண்டுமானால், அவர்களின் இல்லங்களில் போய்ப் பார்க்க வேண்டும்.

பெண் மைனு :—போய்த்தான் பார்க்கலாம் வாயேன், வேடிக்கையாய் இருக்கும்.

ஆண் மைனு :—வேடிக்கையாய் இருக்கும் என்பதில் சந்தேகமில்லை.

★

மாடி வீடு. அந்த வீட்டு வராந்தாவில் ஒய்யாரமாகப் பெண் ஒருத்தி ஊஞ்சல் ஆடிக்கொண்டிருக்கிறாள். எப்போதும் பாடிக்கொண்டே ஆடுகிறவள், இன்று பாடாமலே ஆடுகிறாள். அதற்குக் காரணம் உண்டு. அந்தக் காரணம், கணவன் பிரவேசித்ததும் புலனாகிறது.

மனைவி :—என்னைக் கூட்டிக் கொள்ளாமல் தனியேதானே சுத்திட்டு வரேள்?

கணவன் :—ஊம், ஆரம்பிச்சுட்டையா பல்லவியை?

மனைவி :—இன்னிக்கு எந்தெந்த லேடி 'ப்ரெண்ட்ஸை' யெல்லாம் பார்த்தேள்?

கணவன் :—பார்த்தேன் அத்தனை பேரையும். சும்மா இரு! இந்தப் பொறுமையும் சந்தேகமும் ஒழிஞ்சாத்தான் நம்ம வாழ்க்கை உருப்படும்.

மனைவி :—உங்களுக்கு மாத்திரம் பொறுமை, சந்தேகம் ஒண்ணும் கிடையாதோ?

கணவன் :—அட சட், சும்மா இருன்னு!

மனைவி :—இப்படி எத்தனை நாளைக்குத்தான் வாயடி அடிக்கிறேள், பார்ப்போம்!

* * *

ஆண் மைனு :—இந்தப் பொறுமைத் தீதான் எத்தனையோ குடும்பங்களைச் சுட்டெரிக்கிறது.

பெண் மைனு:—பரஸ்பர
ன்பு இருந்தால் பொறுமை
ா? நம்மைப் போல மன
ாத்து இருந்து, எங்கேயும்
ளை பிரியாமல் போய்வந்தால்,
ந்த வம்பு உண்டா?

★

கனிந்த வீடு. அதன் நாழ்
ாத்தில் கேள்விக் குறியாக
ல்லாள் நிற்கிறாள். அவளெதிர்ல்
லைாயே உருவாக 'இல்லான்' உட்
ர்ந்திருக்கிறான்.

இல்லாள்:—அப்படின்னு எப்போதான்
ங்கிலி பண்ணப் போடப் போறேன்?

இல்லான்:—இதென்ன கேள்வி?
ங்கியிலே பணம சேர்ந்தப்போதான்.

இல்லாள்:—குறைஞ்சது ஒரு மாமாங்க
வது ஆகுமா?

இல்லான்:—என்னை ஏன் இப்படி
தைக்கிறே? சம்பாதிக்கிற சொற்ப
பணத்திலே என்ன செய்யச் சொல்
றே? கடன் வாங்கச் சொல்கிறாயா?
ல்லை, திருடச் சொல்கிறாயா?

இல்லாள்:—சொல்லுங்கோ, சொல்
ங்கோ! சொல்லாத வார்த்தை யெல்
ம் சொல்லுங்கோ ....

இல்லான்:—ஐயோ செல்லம், அழாதே
ல்லம்! நீ அழுதா, என் மனசு அப்
டியே உடைஞ்சு போறது.

இல்லாள்:—நீங்க சங்கிலி பண்ணிப்
ாடற வரை, இருக்கிற நகைகளையும்
ாட்டுக்கப் போறதில்லை.

* * *

ஆண் மைனு:—சதிபதி சச்சரவுகளுக்கு,
க ஆசை ஒரு பிரதான காரணம்.

பெண் மைனு:—இந்தப் பெண்களுக்கு
ர நகைகள் மேல் இத்தனை ஆசை?

ஆண் மைனு:—ஆணுக்கு ஏன் பெண்
ாசை?

பெண் மைனு:—அது இயற்கை.

ஆண் மைனு:—அதே மாதிரிதான் பெண்
ணுக்கு ஆபரண ஆசையும் இயற்கை.

★

புதிய வீடு. அதில் புதுக் குடித்தனம்
இருக்கிறார்கள் இளம் தம்பதிகள்.
ங் குடித்தனத்தின் தனி இன்பத்தை,
கோல் அணு கார்டு ஒன்று வந்து
டுத்து விடுகிறது.



.........எதிரும் புதிருமாக.........

கணவன்:—கேட்டாயா? அம்மா வரானாம்.

மனைவி:—எப்போ வரான்? கூட என் தங்கையையும் கூட்டிக் கொண்டு வராளோ?

கணவன்:—உன் அம்மா இல்லை; என் அம்மா வரான்.

மனைவி:—ரொம்ப நன்றா இருக்கு! அப்பமன்னு நான் பிறந்தகம் போக வேண்டியதுதான்.

கணவன்:—பெற்ற தாயாரை வராதேன்னு பிடிச்சுத் தள்ளச் சொல்றையா?

மனைவி:—அப்படி ஒன்றும் நான் சொல்லலையே! நீங்க உங்க தாயாரோடே இருங்கோ; நான் என் தாயாரோடே இருக்கேன்:

* * *

பெண் மைனு:—பிறந்தகம் இல்லையென்றால் அவள் என்ன செய்வாள்?

ஆண் மைனு:—கிணற்றில் விழுந்து விடுவதாகப் பயமுறுத்துவாள். அல்லது உண்ணாவிரதம் அனுஷ்டிப்பாள். அல்லது அடுக்களையில் வேலைநிறுத்தம் செய்து, கணவனைப் பட்டினி போடுவாள். அடேயப்பா! மனித சமூகத்தில் மாமியார்—நாட்டுப் பெண் பிரச்னை மிகச் சிக்கலான பிரச்னையாயிற்றே!

பெண் மைனு:—மாமியாரும் ஒரு சமயத்தில் நாட்டுப் பெண்ணாக இருந்தவள்தானே? அவள் ஏன் இங்கிதமாக விலகி இருக்கக் கூடாது?

ஆண் மைனு:—இந்த நாட்டுப் பெண்ணும் ஒரு சமயம் மாமியார் ஆகக்கூடியவள் தானே? அவள் ஏன் தாராள மனசுடன் மாமியாரை வரவேற்கக் கூடாது?

★

இரண்டு திண்ணைகள் வைத்த வீடு. அதில் ஒரே ஒரு சமையல் அறை. அந்தச் சமையல் அறையின், எதிரும்



முதல் கொசு:—தங்களுக்குப் பூர்வீகம் எந்த ஊர்?

இரண்டாம் கொசு:—கும்பகோணம்.

முதல் கொசு:—இப்போது எங்கே ஜாகையோ?

இரண்டாம் கொசு:—மாம்பலம்.

---

புதிதாக இரண்டு அடுப்புகள். அவற்றுக்கு எதிரே இரண்டு ஸ்திரீகள். அவர்கள் இருவரும் பக்கத்துக் கூடத்தில் உட்கார்ந்திருப்பவரின் மனைவிகள். "ஏது இன்னும் சண்டை ஒன்றையும் காணோம்!" என்று இரண்டு பெண்டாட்டிக்காரர் வியந்து கொண்டிருக்கையில், சண்டையும் மூண்டுவிடுகிறது.

மூத்தாள்:—என்ன உங்களைத்தானே! இன்றைக்கு என் சமையலைத்தான் சாப்பிடணும்.

இளையாள்:—கூடாது; என் சமையலைத்தான் சாப்பிடணும்.

மூத்தாள்:—உன் சமையலை நாய்கூடத் தின்னாது.

இளையாள்:—நாக்கை அடக்கிப் பேசு!

மூத்தாள்:—நீ அடக்கிப் பேசு!

இளையாள்:—அடுப்பிலே கரண்டி காயறது, தெரியுமோ?

மூத்தாள்:— ஊம் ஹூம்! இவ்வளவு தூரத்துக்கு வந்துடுத்தா? இரு, சொல்றேன்.

கணவன்:— போதும், போதும், போதும்! எழவு சண்டை ஆரம்பிச்சுடுத்தா? உங்க ரெண்டு பேர் சாப்பாடும் வேண்டாம்; ஹோட்டல்லே போய்ச் சாப்பிடறேன். பிடைகள்!

• • •

பெண் மைனா:—ஏன் இப்படி இரண்டு தாரம் கட்டிக்கொண்டு அகஸ்தைப் படுகிறான் மனிதன்?

ஆண் மைனா:— ஒருத்தி இரண்ட[...]
தாரமாக வாழ்க்கைப்படச் சம்மதிக்கிற[...]
தான்.

★

பழைய வீடு. அதன் முற்ற[...]
தில் வயோதிகத் தம்பதிகள். அவ[...]
களுக்கு மத்தியில் வெற்றிலைச் சருகு[...]
இடியுரலும்.

கிழவர்:—நீ இத்தே ரொம்ப பரிகா[...]
செஞ்சுக்கோ; நான் வெத்தி[...]
இடிக்கிறேன்.

கிழவி:—நன்னாயிருக்கு! நீங்க கம்[...]
இருங்கோ! நான் இடிச்சுத் தரே[...]
வெத்திலே!

கிழவர்:—அதெல்லாம் முடியாது; நா[...]
தான் தருவேன்.

கிழவி:—சொல்றதைக் கேளுங்கோ[...]
உங்களுக்குச் சிசுருஷை செய்[...]
கொடுத்து வைக்கணுமே!

கிழவர்:—உன்னைப் போல உத்த[...]
கிடையாது. நூறு வயசு இருக்கணும், [...]

கிழவி:—நன்னாச் சொன்னேன்! மா[...]
கல்யத்தோடேயே சட்டுப்புட்டுனு[...]
போகணும்னு இருக்கேன், நான்...

கிழவர்:—நீ போய்விட்டால் என்[...]
யார் கவனிப்பா? நானும் கூட[...]
வந்துடுவேன்!

• • •

பெண் மைனா:—வயதானாலும் எவ்வள[...]
அன்னியோன்யம் பார்த்தேன்!

ஆண் மைனா:—வயதானதினால்தான் இ[...]
வளவு அன்னியோன்யம். வாலிபத்தில் இ[...]
வளவு அன்பும் ஆதரவும் இருந்திருக்குமோ[...]
என்பது சந்தேகம்.

பெண் மைனா:—பொதுவாக மனி[...]
களின் இல்வாழ்க்கை ரொம்ப வேடிக்[...]
யாய்த்தான் இருக்கிறது.

ஆண் மைனா:—நாம் பார்த்த வே[...]
கைகள் கொஞ்சம். பாராத வேடிக்கைக[...]
எத்தனையோ!

பெண் மைனா:—இவ்வளவு பார்த்த[...]
போதும். அதிகம் பார்த்தால் மனிதவா[...]
நம்மையே கெடுத்து விடலாம்.

ஆண் மைனா:—அதுவும் உண்மைதா[...]
கா, போகலாம்! உச்சாணிக் கொம்ப[...]
தில் உட்கார்ந்து உல்லாசமாய்ப் பாட[...]



# J & N REMINDERS!

ஞாபகக் குறிப்பு

வேலையின் வகை: பாலங்கள், தந்திக் கம்பங்கள், இரும்புத் தூண்கள் நீர்க் களஞ்சியங்கள் முதலியவைகளை நன்கு பாதுகாக்க.

அவசியமாக வேண்டியது: "ரேடியண்டா அல்யூமினியம் பெயிண்ட்" (**Radianta Aluminium Paint**) எல்லாவித சீதோஷ்ண நிலையையும் தாங்குவதோடல்லாமல் பளபளப்பு மளிக்கும்.






## JENSON & NICHOLSON

MAKERS OF PAINTS

# பிரார்த்தனை

பத்மா




அன்று இரவு அவனுக்குத் தூக்கமே கொள்ளவில்லை. சிறிது நேரம் தான் நிம்மதியாகத் தூங்கி இருப்பான். அந்தச் சொப்பனம் அவன் உள்ளத்தைக் குலுக்கி விட்டது. அதை நினைக்கும் போது அவன் உடல் நடுங்கி வியர்த்தது. படுக்கையில் படுப்பதும், பிறகு எழுந்து உட்கார்ந்து சிந்தனை செய்வதுமாக இருந்தான். திடீரென்று ஏதோ நினைத்துக் கொண்ட அவன், நிச்சிந்தையாகப் பக்கத்தில் படுத்து உறங்கிக் கொண்டிருக்கும் குழந்தையைச் சிரத்திலிருந்து பாதம் வரையில் தொட்டுப் பார்த்தான். துக்கத்தைப் பொறுக்க மாட்டாதவன் போல் ஒரு பெருமூச்சு விட்டான். மங்கலாக எரிந்து கொண்டிருந்த விளக்கைச் சற்றுத் தூண்டிப் பிரகாச மடையச் செய்து விட்டு, ஆர்வத்துடனும், இரக்கத்துடனும் தூங்கும் குழந்தையின் முகத்தைப் பார்த்தான். அவனை யறியாமல் அவன் கண்களில் கண்ணீர் நிரம்பிக் கன்னங்களில் வழிந்தோடியது.

அந்த நிமிஷத்தில் அவன் மனதில் ஒரு எண்ணம்—பாவம்! குழந்தைதானே! அவன் வாழ்க்கையின் சுக துக்கங்களில் அடிபட்டிருக்கிறானா! விளையாடுவதற்குப் பொழுதும், அவன் கேட்டதைக் கொடுக்க மனுஷாளும் இருந்தால் போதும், அவனுக்கு! தாய், தகப்பன், குடும்பம், வறுமை, பிரிவு இவைகளைப்பற்றி ஐந்து வயதுகூட நிரம்பாத அவன் என்ன கண்டான்!

அன்று இரவு முழுவதும் அவன் உறங்கவில்லை. இரவு சென்றது; பகல் வந்தது. ஆனால் அவன் மனதில் சூழ்ந்த இருள் மாத்திரம் கலையவே யில்லை.

★

சேதுராமனுக்குச் சிறுவாய்க்குடி பாங்கியில் குமாஸ்தா வேலை. காலை எட்டு மணியிலிருந்து, இரவு எட்டு மணி வரையில் வேலை செய்தால், மாதச் சம்பளம் இருபத்திரண்டு ரூபாயை சில்லறையாக இரண்டு மூன்று தவணைகளில் வாங்கலாம். பெரிய குடும்பமல்ல—மனைவியும் ஐந்து வயதுள்ள குழந்தையும் தான் என்றாலும் வாழ்க்கையில் ஒரு நிம்மதியும் சந்தோஷமும் வேண்டாமா? ஒரு குழந்தை பிறந்தாலும் இனம் த[illegible] பதின்! உழைத்தாலும் உழைப்புக்குத் தகுந்த ஊதியம் இல்லை. வறுமை, கடன்—இவைகளில் அக்குடும்பம் திக்குமுக்காடிக் கொண்டிருந்தது.

வாழ்க்கையில் அளவற்ற அலுப்புக் கொண்ட சேதுராமனுக்கு ஒரு எதிர் பாராத வாய்ப்பாகத்தான் இருந்தது உலக யுத்தம். ராணுவ உத்தியோகத்தில் அமர்ந்தால் நிறையச் சம்பளம், இலவச உணவு, உடை இவைகளெல்லாம் உண்டு. ஆனால் மனைவியையும் குழந்தையையும் விட்டுப் பிரிய வேண்டுமே! ஒரு வேளை அன்னிய நாட்டுக்குப் போகும்படியாகக்கூட இருக்கும்; யுத்தகளத்தின் நடுவே வேலை செய்யும்படி இருக்கும். இவைகளை யெல்லாம் அவன் சிந்திக்காமல் இல்லை. முதலில் வறுமை நீங்க வேண்டும். சற்றுக் கஷ்டப்பட்டாலும் குழந்தையும் மனைவியும் கஷ்டப்படாமலிருக்க வேண்டும். இதைத்தான் அவன் விரும்பினான்.

உடனே 'அக்கௌண்டன்ட்' வேலைக்கு ஒரு விண்ணப்பம் போட்டான். வெற்றிகரமான பதில்தான் என்று சொல்ல வேண்டுமா? — சிறுவாய்க்குடி பாங்கி அவனை விடுதலை செய்து விட்டது.

சேதுராமனின் மனைவி அலமுவுக்குப் பணம், சுகம் இவைகளில் ஆவலே இல்லை.

ணவனின் பிரிவை எண்ணிக் கலங்கி ருள். வாழ்க்கையில் பிரிவினால் ஏற்படும் கத்தைவிட வறுமையே நல்லதாகப் ட்டது அலமுவுக்கு. அவள் தன் கணவ ிடம் எவ்வளவோ மன்றாடினாள். ஒன் ும் பலனில்லை. அவன் போயே போய் ிட்டான்.

வருடம் ஒன்றாகி விட்டது. சேதுராமன் ந்த ஊரில் இருக்கிறான் என்று அலமு க்குத் தெரியவில்லை. ஆனால் க்ஷேம ாய் இருக்கிறான் என்பதை அடிக்கடி றிந்துகொள்ளக் கடிதப் போக்குவரத்து சதிகள் செய்யப்பட்டிருந்தன. மாதம் ாற்றிருபது ரூபாய் அலமுவுக்கு அரசாங் த்தாரால் அனுப்பப்பட்டு வந்தது.

எவ்வளவு பணம் வந்தால் என்ன? ன்ன சுகமிருந்தால் என்ன? வாழ்க்கை ில் நிம்மதியிருக்க வேண்டாமா? அல் ும் பகலும் கணவனின் நினைவே அவள் வைதை உருக்கியது. அவர் எங்கே இருக் ுரோ? என்ன செய்து கொண்டிருக் ுரோ? திரும்பி எப்போது வருவாரோ? தா சர்வகாலமும் என்னைப் பற்றியே னைத்துக் கொண்டிருப்பார்! இல்லை, ழந்தையைப் பற்றித்தான் நினைப்பார்! இப்படியே அவள்மனம் எப்போதும் சேது ாமனைப் பற்றி ஏதாவது சிந்தனை செய்து காண்டிருக்கும். இந்த நீண்ட விசாரத்தி ினடையே குழந்தை மணி அவளுக்கு ரு நிம்மதியை அளித்து வந்தான்.

★

முதல் நாள் இரவு ண்ட துர்ச்சொப் னத்தின் விளைவு மறு ாள் காலை பைசாசம் பால் அவள் மனதில் ஞ்சரித்துக் கொண் ருந்தது. எட்டு மணி ரை அந்தப் படுக்கை லேயே பித்துப் பிடித் வள்போல் உட்கார்ந் ிருந்தாள். சேது ாமன் யுத்தம் நடக் ும் இடத்தில் நின்று காண்டிருக்கிறான். ங்கிருந்தோ ஒரு துப் ாக்கிக் குண்டு வந்து வன் மார்பில் ாய்ந்து விடுகிறது!— இந்தக் காட்சிக்கு டிவு இல்லை. அதற் ுள் அவள் "ஹா!" ன்று அலறியபடியே த்திரை கலைந்து ழுந்து விட்டாள்.

அரைகுறையான இந்தச் சொப்பனத்தின் முடிவை அவள் நினைக்கும் பொழுது அவளது இருதயமே ஓய்ந்து விடும்போ லிருந்தது.

"அம்மா! காப்பி வைச்சுட்டியா? தோசை வாத்துட்டியா?" என்று வழக்கம் போல் கேட்டுக் கொண்டே, படுக்கையை விட்டு எழுந்து உட்கார்ந்தான் மணி.

அவனை அன்புடன் அணைத்துக் கொண்டு, "இல்லேடா கண்ணு! இப் போதான் நானும் எழுந்திருந்தேன். இதோ, சீக்கிரமா எல்லாம் செய்து விடுகிறேன்" என்றாள் அலமு.

சிறிது நேரத்திற் கெல்லாம் தோசை யும் காப்பியும் தயாராகி விட்டது. மணியும் சாப்பிட்டு விட்டுப் பள்ளிக்கூடம் போய் விட்டான். திடீரென்று இடிமேல் இடி விழுவதுபோல் ஒரு வதந்தி — பம்பாயில் வெடி விபத்து! ஊர் முழுவதும் இதே பேச்சாக இருந்தது. இந்தச் செய்தி அலமுவின் காதில் விழுந்தவுடன் அவ ளுடைய துக்கம் எல்லையை மீறிவிட்டது. ஒருவேளை அவர் பம்பாயில் இருந்திருப் பாரோ?— இந்த விபரீதமான எண்ணத் தின் வளர்ச்சி அவளைப் பித்தாக்கி விட்டது—கண்ணீர் மல்கிய அவளுடைய கண்கள் சோர்ந்து சோபை இழந்தன.

இவ்விதமான எண்ணச் சுழலில் சிக்கிய அவள், திடீரென்று ஏதோ நினைத்துக் கொண்டவள் போல் சட்டென்று எழுந்து



டந்தான். சிவன் கோவிலிலுள்ள அம்பிகையின் சந்நிதானத்தின் முன்னால் வந்து நின்றாள். சாவித்திரி எமனிடம் மன்றாடியதுபோல் அவள் அம்பிகையிடம் மங்கல்யப் பிச்சை வேண்டினாள். இந்தப் பிரார்த்தனையின் பலனாக ஏற்பட்ட நம்பிக்கையில் அவளுக்கு ஒரு சிறு ஆறுதல். கோவிலிலிருந்து வீட்டிற்கு வந்தாள். ஆனாலும் இரவில் கண்ட கனவின் நிழல், காலையில் கேட்ட பயங்கரச் செய்தியின் ஒலி—இவை அவளுடைய மனதில் பயத்தையும், நடுக்கத்தையும் உண்டாக்கிக் கொண்டே இருந்தன.

அன்று மாலை துளசிமாடத் தருகில் குத்து விளக்கு எரிந்து கொண்டிருந்தது. அதற்கு எதிரே தேங்காய், பழம்,
இலைகள் தட்டில் வைக்கப் பட்டிருந்த
அலமு ஏதோ ஆவேசம் வந்தவள்போ
கை குவித்தபடி கண்களில் நீர் வழிய
துளசிமாடத்தைச் சுற்றி வலம் வந்
கொண்டிருந்தாள்.

வாசற் கதவை ரொம்ப நேரம
யாரோ தட்டிக் கொண்டிருந்தார்க
அவளுடைய பிரார்த்தனைக்குச் சற்
இடையூறு அளிக்கக் கூடியதாய்த்தா
இருந்தது. அந்தக் கதவு தட்டும் சத்த
"யாரா யிருக்கும்? மணி ஆய்த்தா
இருக்கும்!" என்று எண்ணியபடியே
துளசி அம்மனை எழுப்பித் த
மண்டியிட்டு நமஸ்கரித்துவிட்டு, சாவகா
மாக வாசற்புறம் வந்து க
வைத் திறந்தாள். — அ
வனவு தான்; அலமு அ
படியே ஸ்தம்பித்து நின்
விட்டாள்!

"ஏண்டி! எத்தனை நா
யாகக் கதவைத் தட்டறது
பார்த்தவுடனே அப்படியே
பதுமைபோல் நின்று வி
டாயே! பயல் எங்கே?
என்று சொல்லியபடியே, ஒ
கையில் பெட்டியையும் இ
ரொரு கையில் படுக்கை
யும் எடுத்துக் கொண்
உள்ளே நுழைந்தான் சே
ராமன்.

அலமு யந்திரம்போல் அ
னைப் பின் தொடர்ந்தா
"நான் எதிர்பாராத வித
வந்திலே நீ பிரமிச்ச
போயிட்டே, இல்லையா
லீவு கொடுப்பான்னு நா
நினைக்கவே இல்லே! எ
னமோ எழுதிப் போட்
வைத்தேன். நல்ல வேளை
உடனே கொடுத்து
டார்கள்!" என்றான் சே
ராமன்.

அலமு அவனுக்கு ஒன்று
பதில் சொல்லவில்லை. அ
ளுடைய கண்கள் பனிவுட
துளசி மாடத்தை நோக்கின
கைகள் இரண்டும் அவ
யறியாமல் குவிந்தன. க
களின் இமையோரத்தி
முத்துப் போல இரு சொ
டுக் கண்ணீர்! — ஆனந்த
கண்ணீர் அது: ஆத்மீகமா
பிரார்த்தனையில் எழுந்
நம்பிக்கை உணர்ச்சி அது!

## யாருக்கு எச்சரிக்கை?



# 4 மணி ஆகிறது



உலகமெங்கும் லக்ஷக்கணக்கான வீடுகளில் "நான்கு மணி"க்கு ஒரு விசேஷ அர்த்தமுண்டு. ஐசுவரியமுள்ள அரண்மனைகளிலும், எளிமையான குடிசைகளிலும், பெரிய குடும்பங்களிலும், தனிமையாக ஓரிருவர் உள்ள வீடுகளிலும், சித்திர வேலைக்காரரும், நிலக்கரி சுரங்க வேலையாளும், சிப்பாயும், எளிமையான குடியானவனும், பனியுறையும் வடக்குப் பிரதேசத்திலும், வெய்யிலெரிக்கும் உஷ்ணப் பிரதேசங்களிலும் நாலு மணிக்கு எல்லோரும் ஏகமனதுடன் மனிதருக்கு மனிதர் வேற்றுமையின்றி சமநிலையடைகின்றனர். ஏன்? நான்கு மணி தான் உலகெங்கும் டீ அருந்தும் நேரம்!

இச்சாதாரண செடி எவ்வளவு சுகத்தையும் ஆனந்தத்தையும் அளிக்கிறது! நன்றாக தயாரிக்கப்பட்ட டீ மனித சமூகத்துக்குக் கிடைத்த ஒரு மிக அரிய பொருளென்றால் மிகையாகாது. ஆனாலும், நல்ல டீ தயாரிக்கும் சில சுலபமான முறைகளைக் கவனியாமல் எவ்வளவு பேர் இவ்வரிய பானத்தின் பூரா நலனை அடைவதில்லை!



## நல்ல டீ தயாரிக்கும் முறை

1. கெட்டிலில் டீ காய்ச்சக்கூடாது. டீ பாத்திரத்தை உபயோகியுங்கள்.
2. உலர்ந்த டீயை பாத்திரத்தில் போடும்போது பாத்திரம் ஈரமில்லாமல் இருக்கவேண்டும். அப்பொழுதுதான் நறுமணமுள்ள கஷாயம் கிடைக்கும்.
3. கப்புக்கு ஒரு டீ ஸ்பூன் வீதமும், பாத்திரத்துக்காக ஒரு டீ ஸ்பூனும் டீ போடவும்.
4. புதிதாக காய்ச்சிய நீரையே உபயோகிக்கவும்; ஒரு தரம் காய்ச்சிய நீரையோ, அதிகமாகவோ அல்லது குறைவாகவோ காய்ச்சப்பட்ட நீரையோ ஒருபோதும் உபயோகிக்காதீர்கள். தள தள வென்று குமிழியிட்டு கொதிக்கும் நீர் தான் சரியாக காய்ச்சின நீர்.
5. கஷாயம் இறங்க குறைந்தது 5 நிமிஷ கால நேரம் வேண்டும்.
6. பாத்திரத்தில் இருக்கையிலேயே பால் சர்க்கரை சேர்க்காதீர்கள்; கப்புகளில் விட்ட பிறகு சேர்க்கவும்.



எந்தநேரமும்

டீ

டீ அருந்தும்நேரம்

இந்தியன் டீ மார்க்கெட் எக்ஸ்பான்ஷன் போர்டாரால் வெளியிடப்பட்டது.

IK-248-A-T

# இந்தியத் தேயிலையில் மிகச் சிறந்தது



மிக நேர்த்தியான மணமும், நல்ல நிறமும், குறைந்த விலையும் உள்ள லிப்டன்ஸ் தேயிலை பெண் தேயிலைகள் இதர தேயிலைகளை விட சிறந்தவை.




# லிப்டன்ஸ் தேயிலை பெண்

நேர்த்தியான இந்திய தேயிலை

LTR 84 O

# வானசஞ்சாரம்

இசைத்தேனீ

திருச்சி நிலையத்தில் 2-ல இரவு கச்சேரி செய்த மன்னார்குடி ராஜகோபாலப் பிள்ளை மதிப்புக்குரிய அனுபவம் வாய்ந்த வித்வான். அன்று அவர் பாடிய தெல்லாம் சம்பிரதாய முறையாகக் கேட்டன. தோடியும், பல்லவி ராகமாகக் காம்போதியும் சிறப்பாயிருந்தன.

ரேடியோ நிலையங்களில் அடிக்கடி கேட்காததோர் அரிய நாதஸ்வரக் கச்சேரி 3-ல திருச்சி நிலையத்தில் அமைந்தது. வாசித்தவர் திருவெண்காடு சுப்ரமணியப் பிள்ளை. அவர் நாதஸ்வரத்துக்குச் சாதாரணமாய் ஏற்பட்ட உரத்த சத்தத்தை மிகவும் அடக்கி, தம்பூரா, வயலின், மிருதங்கம் முதலிய பக்க வாத்யங்களுடன் மிருதுவாயும் இனிமையாயும் வாசிப்பவர். அன்று அவர் வாசித்த பூர்வி கல்யாணி, கானடா, ஹரிகாம்போதி, ஆபேரி, இவைகளோடு பல்லவி ராகமாகத் தோடியும், பல்லவி ராகமாலிகையும் வெகு சுமாரா யிருந்தன. நாத வளப்பமே முக்கிய லட்சியமாகக் கொண்ட இவ் வழியில் படாடோபமான கற்பனை வேலைப்பாடுகள் அதிக மில்லாதிருப்பது இயல்பே.

4-ல சென்னையில் முழு நேரம் வீணைக் கச்சேரி செய்த வி. வெங்கடகிரியப்பா பிராபல்யம் வாய்ந்த வித்வான். அபார ஞானமும் அசாத்ய சாதகமும் கொண்டவர். கர்நாடக சங்கீதத்தில் எந்த வகை என்று சொல்வது தான் சிரமமாகும். உயரிய விஞ்ஞானத்தின் அழகு, தொட்டவிட மெல்லாம் பளபளப் பொழியுடன் இழைவது. வெங்கடகிரியப்பாவின் வாசிப்போ பலவித நாத வேலைப்பாடுகளையே பிரதானமாகக் கொண்டது. அன்று கேட்ட ஐந்து ராகங்களில் காரணிக கமக அழகு தென்பட்டது. உதய ரவிச்சந்திரிகா, புன்னாகவராளி, லலிதாஞ்சலி, கமலாவர்த்தினி, ராகங்களிலும் உருப்படிகளிலும் தானம் ஸ்வரப் பிரஸ்தாரங்களிலும் உரத்த மீட்டுடன் பாண்டு வாசிப்பது போலும், புள் புள்ளர போலும் சாதாரணமாய்க் கேட்கப்படாத பல நாத வேலைப்பாடுகள் கேட்டன. கமலாவர்த்தினியில் தாரஸ்தாயி சஞ்சாரங்கள் கவனத்தை யிழுத்தன.

5-ல திருச்சியில் கே. பாலகிருஷ்ணப் பிள்ளை கடுந்தர சாரீரமும் ஞானபலமும் கொண்டு பந்துவராளி, ஸ்ரீ ரஞ்சனி, கல்யாணி உருப்படிகளையும் தாராளமாய் வழங்கினார். பாடிய தெல்லாம் ஒழுங்கா யிருந்தன.

• • •

திருச்சியில் 1-ல அரியூர் ஆர். கிருஷ்ணனின் கானத்தைக் கேட்டவர்கள், அவர் விரைவில் முன்னுக்கு வரவேண்டிய வித்வான் என்பதைக் கண்டிருப்பார்கள். நய சாரீரத்தின் நல்ல உதவியுடன் கல்யாணி, ஸிம்மேந்திரமத்யமம், பைரவி ராகங்களைத் திறம்பட வழங்கினார்.

2-ல திருச்சியில் பி. எம்போதா பாகவதர் பேகடா, ஆரபி, மணிரங்கு ராகங்களையும் ஒரு ராகமாலிகையையும் வன்மையாய்ப் பாடியதிலிருந்து சிறந்த ஞானமும் தேர்ச்சியும் கொண்டவர் என்று தோன்றியது.

3-ல சென்னையில் டி. பி. சுப்ரமணிய அய்யரின் கேதாரம், பூர்விகல்யாணி, பெஹாக் ராகங்களும் அவைகளில் பாடிய உருப்படிகளும் கச்சிதமா யிருந்தன.

4-ல திருச்சியில் எம். ஆர். கோபாலரத்னம், சென்னையில் ஏ. எஸ். அனந்த கோபாலன் இவர்களின் கானங்கள் குறிப்பிடத்தக்கவை. முன்னவரது ஸிம்மேந்திரமத்யமம், கரஹரப்ரியா, ஸஹானா ராகங்களும் 'எந்த வேடு கொந்து' கிருதியில் நிரவல் ஸ்வரங்களும் அவரது ஞானபலத்தை வெளிப்படுத்தின. பின்னவர் நய சாரீரமும் நல்வழியும் கொண்டு, வெகு சரளமாய், கல்யாணி, ராகத்தையும் 'பிராணவ' 'ஸத்குருஸ்வாமி' உருப்படிகளையும் கையாண்டது மனம் கவர்ந்தது.

6-ல சென்னையில் எஸ். சங்கரன் நய சாரீரத்தில் அநாயாசமாயும் உருக்கமாயும் ஹம்ஸத்வனி காம்போதி ராகங்களையும் உருப்படிகளையும் பாடினார்.

7-ல இரவு சென்னையில் நடந்த ராஜ ராஜன் என்ற நாடகத்தின் கதை ரஸமா யிருந்தது. ஆனால் நடிப்பில் சில பாகங்கள் தான் கவர்ச்சியளித்தன.



மருந்து வியாபாரி:—கனவான்களே, இதோ பாருங்கள்! இந்தச் சின்ன புட்டியிலுள்ள மருந்தைச் சாக்கடையில் ஊற்றினால் போதும், சாக்கடையின் நாற்றம் பறந்து போகும். இதன் விலை அரை ரூபாய்தான். அப்புறம் இந்தச் சின்ன புட்டி மருந்தின் நாற்றத்தைப் போக்க இதோ பெரிய புட்டியிலுள்ள மருந்தைக் கொட்டினால் போதும். இதன் விலை நாலு ரூபாய்தான்.



# வாங்க ஐயா, வாங்க!

வாங்க ஐயா, வாங்க!
வாகான மந்திரிகளா!

★

கோடியான பாதையிலே
கொண்டிமாட்டை வண்டிகட்டி
கடையாணி இல்லாமே
கனஜோரா வந்துட்டீங்க

2. மேலிடத்து யோசனையை
மீறிவிடக் கூடிப்பேசி
காலும் மறந்து இப்போ
காட்டாமைக்கு வந்துட்டீங்க

3. பட்டம் பதவிமோகம்
பாத்துக்கிங்க இல்லையென்று
திட்டமிட்டுக் கூடினீங்க
சட்டமிட வந்துட்டீங்க

4. மந்திரிப் பதவி யென்றால்
மதியூகம் வேணுமையா
சொந்தமா யில்லாட்டியும்
சுத்தி ஆளை வைச்சுக்கிங்க

5. பத்தோடே பதிமூணு
பாவமில்லை நல்லதுதான்
சொத்தை மாடா யிருந்தாலும்
சோதனா யிருந்தாச்சரி!

6. காங்கிரசு காந்தியென்று
கதைசொல்லி ஓட்டுவாங்கி
காங்கிரசுத் தலைவர்களைக்
காலைவாரி விட்டுட்டீங்க!

7. நல்லதும் கெட்டதுந்தான்
நடைமுறையில தெரிஞ்சபோதும்
பல்லுப்போன கிழவர்சொல்லு
பழுதாகிப் போயிடுமோ!

—காட்டூர் கண்ணன்.



# தச்சு வேலைக்காரர்

எந்த சமூகத்திலும் மர வேலை செய்பவர்கள் உண்டென்றாலும் சீக்கியர்களையே தங்கள் சொந்த மாகாணமான பஞ்சாபை விட்டு வெளியிடங்களில் காணலாம். இந்தியாவின் தென் கோடியிலுள்ள மலையாளிகளும் தச்சு வேலையில் சமர்த்தர்கள்.

அழகிய மரச்சாமான்கள் செய்யக் கைப் பழக்கம் வேண்டும். துண்டுகளை இழைப்பதிலும் இணைப்பதிலும் கவனிப்பும் கை லாகவமும் அவசியம்.

தச்சர்களிடம் மது அருந்தும் வழக்கமில்லை, ஆனாலும் ஒரு கோப்பை தேனீர் அவர்கள் வேலையில் கவனம் செலுத்த உதவுகிறது. மற்ற கைத்திறமை வாய்ந்தவர்களைப் போலவே தச்சர்களும் தாங்கள் உபயோகிக்கும் பொருள்களின் தராதரங்களைக் கவனிப்பவர்கள். புதுமையே நன்மையின் காரணம் என்பது தெரியா விட்டாலும் ப்ரூக்பாண்ட் தேயிலையை நன்கு அனுபவிக்கத் தெரியும். இந்தியாவெங்குமுள்ள இத்தகைய தொழிலாளிகளுக்கும் தோட்டத்திலிருந்து நேராக ப்ரூக்பாண்ட் தேயிலை போய்ச் சேருகிறது.



தோட்டத்திலிருந்து பறித்தபோதுள்ள புத்தப்புதுமை

# ப்ரூக் பாண்ட்

"இரு இலையும் ஒரு மொட்டும்"



# காலக்ஷேபம்



## அக்கரை!

மாமியார் (அறைக்கு வெளியே இருக்கும் மருமகளைக் கூப்பிட்டு):—ஏண்டி, பக்கத்து அறையிலுள்ள சாமான்கள் கீழே விழுந்து உடையும் சத்தம் கேட்கிறதே. அதை ஏன் கவனிக்காமல் உட்கார்ந்திருக்கிறாய்?

மருமகள்:—கோபிக்காதேயுங்கள், மாமி! நீங்கள் தான் விழுந்து விட்டீர்களோ என்று சும்மா இருந்து விட்டேன்!

—ஏ. ஜானகி.



## நியாயந்தான்!

மனைவி (கணவனிடம்):—லாட்டரியிலே பணம் விழுந்தா எனக்கு வைர அட்டிகை வாங்கித் தரேன்னேளே, அது வேண்டாம் எனக்கு; ஒரு கார் வாங்கிக் கொடுங்கோ!

கணவன்:—ஐயையோ! இமிடேஷன் கார் கிடையாதே! —எஸ்.என். துரைசாமி.



## இறந்த காலம்!

வயது முதிர்ந்த உபாத்தியாயினி:— நான் அழகாக இருக்கிறேன். — இது எந்தக் காலம்?

மாணவி:—இறந்த காலம், டீச்சர்!

—எம். எம். சிவலிங்கம்.



## சண்டை இல்லை!

மாப்பிள்ளை:—என் மாமனார் வீட்டுக்கு இந்த ஒரு வருஷத்திலே ஒரு தடவைதான் நான் போயிருக்கிறேன்.

தோழன்:—ஏன்? ஏதாவது சண்டை வந்துட்டுதா?

மாப்பிள்ளை:— அதெல்லாம் ஒன்றுமில்லை. நான் அங்கு போனதுக்கு எட்டு மாதம் கழித்துத்தான் திரும்பி வந்தேன்!

—ஏ. கே. எஸ். மணி.



## கேட்டதும் கிடைத்ததும்

வேலைக்கு வந்தவன் (சர்க்கஸ் மானேஜரிடம்):—நான் பெரியதாயும் சுத்தமாயும் ஒரு வேலை செய்ய விரும்புகிறேன்.

சர்க்கஸ் மானேஜர்:—அப்படியானால் யானையைக் குளிப்பாட்டும் வேலை உனக்குக் கொடுக்கிறேன். —டி. ஆர். விஜயராகவன்.

## மறந்த விஷயம்

புதிதாக மணந்த தம்பதிகள் ஸ்டேஷனில் டிக்கெட் வாங்குகிறார்கள்.

புருஷன்:—ஸார், தஞ்சை போக ஒரு டிக்கெட் கொடுங்கள்.

மனைவி:—ஏன் ஒரு டிக்கெட் மாத்திரம் வாங்கியிருக்கிறீர்கள்!

புருஷன்:—உன் நினைவில் என்னையே மறந்து விட்டேன்! —கே. ரங்கநாதன்.



## எங்கே போகிறது?

ஒருவர் (மற்றவரைப் பார்த்து):— ஐயா! இந்த ரோடு எங்கே போகிறது?

மற்றவர்:—நான் பிறந்தது முதல் இதுவரை இங்கேயேதான் இருக்கேனுங்க! இந்த ரோடும் இங்கேயேதான் இருக்குதுங்க!

—எம். எஸ். பாலு.



## என்ன செய்தீர்?

டாக்டர் (நோயாளியைப் பார்த்துக் கோபமாக):—ஏன் ஐயா! உமக்கு வியாதி இவ்வளவு தூரம் முற்றுகிற வரையில் தூங்கிக் கொண்டா இருந்தீர்?

நோயாளி:—இல்லீங்களே! எனக்கு இந்த ஆறு மாசமா தூக்கமில்லாத வியாதி தானுங்களே! —எஸ். சொர்ணம்.



## தெரிந்த விஷயம்!

மருந்துக் கடையில் ஒரு மனிதர் அவசரம் அவசரமாக நுழைந்து, ஸ்ட்ரிக்னின் மருந்து வாங்கும் பக்கமாக மருந்து கேட்டார்.

கம்பௌண்டர் (கோபமாக):— என்னப்பா, ரொம்ப அவசரமோ? இது ஸ்ட்ரிக்னின்



மருந்து வாங்கும் வழி என்று உமக்குத் தெரியாதோ?

வந்தவர்:—தெரியும், ஸார்! நான் என் மனைவிக்கல்லவா மருந்து வாங்க வந்திருக்கிறேன்!

—எஸ். என்.

# லைப்பாய் பழக்கத்தையும் அவன் அறிந்திருக்கிறுன்



அவன் ஸ்கூலுக்குப் போகிறுன். அங்கிருந்து என்ன கொண்டு வருவான்? புதிய அறிவு, புதிய முறைகள் — சில தொத்து வியாதிக் கிருமிகளுங்கூட! அவனுக்குக் கற்றுக் கொடுத்த எல்லாப் பாதுகாப்புகளுடனும் தாயார் தன் மகனை அனுப்புகிறுள்.. ஆரோக்கியமுள்ள ஜீவனையும் பிடிக்கக் கூடிய அழுக்கு அபாயத்திலிருந்து காப்பாற்ற லைப்பாய் சோப்பைத் தினசரி உபயோகிப்பதே அவற்றுள் முக்கியமானது.




லைப்பாய் ஒரு நல்ல சோப்பைக் காட்டிலும் சிறந்தது.

அது ஒரு நல்ல பழக்கம்.

L. 74-38 TM.

LEVER BROTHERS (INDIA) LIMITED

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Pre
116-119, Sladens Garden, Poonamalle High Road, Kilpauk, Madras.

